





இயற்கையான வாஞ்சையுடன்

அடைய விருப்புதல்

குழந்தைக்கு ஆரோக்கியத்தைத்

தரும்

வுட்வார்ட் வைத்தியனின்

"கிரைப் வாட்டர்"

என்னும் மருந்துத் திராவகம்

# WOODWARD'S GRIPE WATER

W. WOODWARD LTD., LONDON, ENGLAND

சுதேசமித்திரன்
வாரப் பதிப்பு



தாரணஞு வைகாசிமீ 1௳ (14-5-'44)



# பிரார்த்தனை பலித்தது



கோடிக்கணக்கான இந்தியர்கள் ஒரு முகமாக உள்ளம் உருகிச்செய்த பிரார்த்தனை வீண்போகவில்லை. சென்றவாரம் மகாத்மா காந்தி ஆகாகான் அரண்மனையிலிருந்து விடுதலை செய்யப்பட்டுவிட்டார். தேக நிலைமையைப்பற்றி கவலைப்படும்படியாகவுள்ள தருணத்திலும் அவரை விடுதலை செய்யாமல் இருப்பது விவேகமில்லை; விபரீதமான விளைவுகளைத்தான் உண்டாக்கும் என்று சுட்டிக்காட்டியது பிரிட்டிஷ் சர்க்காருக்குக் கடைசியில் உறைத்தது. இந்தியாவந்து வைஸ்ராய் பதவி ஏற்றுக்கொண்ட பின்னர் வேவல் பிரபு முதன் முதலாகச் செய்த உருவான காரியம் இது. இதையடுத்துச்செய்ய வேண்டிய கடமை எஞ்சி நிற்கிறது. அதை நிறைவேற்றுவதற்கு முதல் அறிகுறியாகவே மக்கள் மகாத்மாஜீயின் விடுதலையை கருதுவராயின் அதுரொம்ப இயற்கையானதுதான். ஆனால் சர்க்கார் காந்திஜீயின் நிபந்தனையின்றி விடுதலை செய்வதாக விடுத்த அறிக்கையை உற்றுக்கவனித்தால் அந்த நம்பிக்கைக்கு இடம் காணமுடியவில்லை. "வைத்தியக்காரணங்களை முன்னிட்டே" இந்த விடுதலை என்று தெரிவித்திருக்கின்றனர். நாட்டில் இப்போதிருந்து வரும் அரசியல் நெருக்கடியை தீர்த்து வைக்கத் தயாராகவில்லையென்பதைச் சொல்லாமல் சொல்லியிருக்கின்றனர் சர்க்கார். மகாத்மாவை விடுதலை செய்ததன் மூலம் நாட்டினர் மனத்திடை நிலவியிருந்த கசப்பு ஓரளவு மாறியிருப்பதைச் சர்க்கார் பயன்படுத்திக்கொள்வதற்கு இப்போது மிகச் சிறந்த சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. அதை அவர்கள் உபயோகப்படுத்திக்கொண்டால் ஜப்பானியர் இந்தியாவுக்குள் புகுந்து மும்முரமாகப் போராடி வரும்போது எவ்வளவு உதவிகரமாகவிருக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

மகாத்மா ஆண்டவன் அருளாலும், நாட்டினர் செய்த புண்ணியத்தாலும் இதுவரை பெரும் பெரும் கொடிய சோதனைகளையெல்

—அடுத்த பக்கம்



# சென்ற வார நிகழ்ச்சிகள்

## ஆகாகான் அரண்மனைக்கு மகாத்மா விஜயம்

புனவில் இருக்கும்வரை மகாத்மா காந்தி ஆகாகான் அரண்மனைக்குப் போய் தமது மனைவியும், தேசாயும் தகன மான இடங்களில் புஷ்பங்களைச் சொரிந்தார். இவ்விரு ஸமாதிகளையும் ஒரு புண்ய ஸ்தலம்போல மதித்து ஏராளமாக ஜனங்கள் போய்ப் பார்த்து வருகின்றனர்.

* * * * *

## டாக்டர் ஜீவராஜ்மேத்தா விடுதலை

தேக நிலையை முன்னிட்டு டாக்டர் ஜீவராஜ மேத்தா புனவிலிருந்து 2-மாத காலத்துக்கு நிபந்தனையின் பேரில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார். விடுதலையானதும் டாக்டர் மேத்தா "பர்ணகுடி" ஆச்ரமத்துக்குச் சென்று மகாத்மாவைக் கண்டார்.

* * * *

## கம்பியில்லாத் தந்தி ஹன்ஸ் ராஜ் ரேடியோ

கம்பி யில்லாத் தந்தி ஹன்ஸ் ராஜ் வைஸ்ராய் சென்ற ரயில் மீது குண்டு வீசியதாக வந்த வழக்கில் எதிரியாக விருந்து விடுதலை செய்யப்பட்டார். அவர் விடுதலையானது முதல் விஞ்ஞான ஆராய்ச்சியில் நாட்டஞ் செலுத்தி வந்தார். அவரது ஆராய்ச்சியின் பலன் இப்போது ஒரு ரேடியோ. புது மாதிரியில் கண்டு பிடித்த ரேடியோ இது. இதற்கான சகல சாமான்களும் சுதேசி. இந்தியாவிலுள்ள எல்லா ரேடியோ ஸ்டேஷன்களின் நிகழ்ச்சிகளையும் இதன்மூலம் கேட்க முடியும். விலையோ வெகு சொற்பம். ரூ 50 தான்! கூடிய சீக்கிரம் இந்த ரேடியோ ஸெட்டுகள் வியாபாரத்துக்கு வந்து விடும் என எதிர்பார்க்கப்படுகிறதாம்.

* * * *

## 1922 தோலா தங்கம்!

சென்னை சைனபஜார் 107-வது நம்பர் கட்டிடத்திலுள்ள ஆர். ஸி. அண்டு கம்பெனியைப் பூக்கடை போலீஸார் சோதனை செய்தனர். இன்ஸ்பெக்டர் ஸ்ரீமான் லோகநாதனும் ஸிவில் ஸப்ளை இன்ஸ்பெக்டர் மிஸ்டர் மாதியும் இவ்வேலையில் ஈடுபட்டனர். ஒரு அறை நிறைய ஆயிரக்கணக்கான கெடிகாரங்களையும் ரிஸர்வ் பாங்கி பம்பாய் தங்க ஆலை இவற்றின் முத்திரையிட்ட 1922 தோலா தங்கத்தையும், 2, 902 ஹைதராபாத் வெள்ளி ரூபாய் நாணயங்களையும் அவர்கள் கைப்பற்றினர். மேற்கொண்டு விசாரணை நடைபெற்று வருகிறது. ஆர். ஸி. கம்பெனியின் சொந்தக்காரர் ஸ்ரீ ஸ்ரீனிவாஸ் இக்கம்பெனி ஸ்விட்ஜர்லந்து கெடிகாரங்களில் மொத்த வியாபாரம் நடத்திவருவதாகக் கூறப்படுகிறது.

* * * *

## ராணுவ லாரிகள் போக்குவரத்து

சென்னை தென் ராணுவ தலைமைக் காரியாலய அறிக்கை ஒன்று கூறுவதாவது:—ராணுவ வண்டிகள் மிகவும் அஜாக்கிரதையாக, ஓட்டப்படுவதைக் கண்டு பொது மக்களிடையே ஏற்பட்டிருக்கும் கவலையை ராணுவ அதிகாரிகள் உணருகின்றனர். கூடிய மட்டும் விபத்துகளைத் தவிர்க்க முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படுமென்று அதிகாரிகள் தெளிவுறுத்த விரும்புகின்றனர். தற்போதைய நிலைமையைக் கண்டு மிக அதிருப்தியடைந்து, நிலைமையைச் சீர்படுத்த மிகவும் தீவிர நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும் என்பதையும் அதிகாரிகள் தெளிவுறுத்த விரும்புகின்றனர்.

சென்னை, பம்பாய், ராஜதானிகள் மற்றும் பல இந்திய சமஸ்தானங்களிலுள்ள எல்லா ராணுவ அதிகாரிகளுக்கும், தலைமைக் காரியாலயத்திலிருந்து புதிய ஏற்பாடு பற்றித் தகவல் அனுப்பப்பட்டிருக்கிறது.

* * * *

## ஜின்னவுக்கு வேண்டுகோள்

காங்கிரஸ்-லீக் சமரஸத்தை முன்னிட்டு மகாத்மா காந்திஜியைச் சந்திக்கவேண்டுமென்று கோரி கக்ஸார் தலைவர் அலாமா மஷ்ருகி முஸ்லிம் லீக் தலைவர் ஜனப் ஜின்னவைக் கேட்டுக்கொண்டு எழுதியிருக்கிறார். மகாத்மா இப்போது விடுதலை பெற்றிருப்பதால் நிலைமை திடீரென்று மாறியிருக்கிறதென்றும் இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளும்படியும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

——::——

(முன் பக்கத்தொடர்ச்சி)

லாம் வென்று உயிர் வாழ்கிறார். அந்த உயிர் தேசத்தின் சொத்து. அதைப்பாதுகாத்து வர வேண்டியது ஜனங்கள் பொறுப்பு. எனவே மகாத்மா பரிபூர்ணமாகக் குணம் அடையும் வரை அவரைப்போய் கண்டு விவாதிக்க வேண்டுமென்று விரும்புபவர்கள் விலகி நிற்பதுதான் முறை. இதனால் அவர் விரைவில் குணமடைந்து மக்கள் தம்மிடம் வைத்துள்ள நம்பிக்கைக்குப் பாத்திரமாக மீண்டும் தமது கடமையைச் செய்வார். அதற்கு ஆண்டவன் அருள்புரிவாராக!

———




## இந்திய அரங்கம்

அரக்கான் பகுதியில் நேசப் படைகள் புதிடாங்கைக் காலி செய்துவிட்டன. அந்த ஸ்தலம் தங்கள் வசமிருப்பது அவசிய மில்லையென்று நேச அதிகாரிகள் ஒரு அறிக்கை விடுத்திருக்கின்றனர். ஆனல் இரண்டு மாதங்களுக்கு முன் நேசக் கட்சி அதை எதிரியிடமிருந்து கைப்பற்றுமுன், அதுவே அரக்கான் பகுதியில் ஜப்பானிய ரது தளமாக இருந்து வந்த தென்பது குறிப்பிடத்தக்கது. இப்போது எதிரிகள் புதிடாங்கை ஆக்கிரமித்துக்




கொள்வதன் மூலம் அதற்குத் தெற்கேயுள்ள நேசத் துருப்புகளுக்கு ஆபத்து ஏற்படலாம். ஆனல் இதைவிட் புதி டாங்குக்கு வடகிழக்கே தோன்றியுள்ள ஆபத்து விஷயத்தில் நேச அதிகாரிகள் இன்னும் உஷாராக இருக்கவேண்டியது அவசியம். அங்கு ஜப்பானியர் கைப்பற்றியுள்ள பாலட்வா என்ற ஸ்தலம் சிட்டகாங்-பர்மா எல்லையிலிருந்து சுமார் பத்து மைல் தூரந்தான். அங்கு எதிரிகளை மேற்கொண்டு முன்னேறிவிடுவதன் மூலம் அரக்கானிலுள்ள நேசப் படையின் சப்ளை சாதனங்களுக்கு இடுக்கண் அதிகரிக்குமென்பதை நேச அதிகாரிகள் உணராதிருக்க முடியாது.

* * * *

## மணிபூர் போர்

கோஹிமாவில் ஒரு பகுதி நேசக்கட்சியிடமும், மற்ருெரு பகுதி எதிரிகளிடமும் இருந்து வருகிறது. நேசப் படைகள் அதை வளைத்துக்கொண்டு அப்பட்டணம் முழுதையும் திரும்பப் பிடிக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். இம்பாலைவிட இப்பகுதியில் தான் சண்டை மும்மரமாக நடந்து வருகிறது. சமீபத்தில் இந்தப் போர் முனைகளைப் பார்வையிட்டுத் திரும்பிய பிரசார இலாகா மெம்பர் ஸர் சுல்தான் ஆமத், "ஜப்பானியரை வளைத்துக்கொண்டு விட்டோம்; அவர்கள் மழை துவங்கு முன் பின் வாங்கியோட வேண்டும்; இல்லையேல் நிர்மூலமாக வேண்டியதுதான். எதிரியை அடியோடு முறியடிப்பதற்கு வேண்டிய பலம் அங்கு நமது படைக்கு இருக்கிறது" என்று உறுதி கூறுகிருர். அவர் இம்பாலுக்கு விமானத்தில் சென்றபோது அவருக்கு விசேஷ பந்தோபஸ்து செய்ய நேர்ந்தது. ஏனெனில் அவர் அவ்வரங்கத்துக்குப் போனது எதிரிக்கு எப்படியோ முன்னதாகவே தெரிந்துவிட்டது.

தரை மூலம் பர்மாவைத் திரும்பக் கைப்பற்ற எண்ணுவது முட்டாள்தனமாகுமென்று ஒரு ஆஸ்திரேலியப் பிரமுகர் கூறுகிருர். அவ்வரங்கத்தில் எதிரிக்குள்ள சப்ளை சாதனம் நேசக் கட்சிக்குள்ளதைவிட விசேஷமானதென்று அவர் எடுத்துககாட்டுகிருர்.

* * * * *

## ரஷ்யப் போர் முனை

ருமேனியா, போலந்து பிரதேசங்களிலுள்ள சோவியத் படைகள் தீவிரமான தாக்குதல் எதுவும் துவக்க வில்லை. ஜெர்மனியரின் எதிர் தாக்குதலை வெற்றிகரமாகச் சமாளித்து வருவதாக மட்டுமே ரஷ்ய சர்க்காரின் அறிக்கைகள் கூறுகின்றன. இப்போதைக்கு அவர்கள் பிரிட்டிஷ்-அமெரிக்க முறையைப்பின்பற்றி விமானங்கள் மூலம் நாஜித் தளங்களைத் தாக்குவதிலேயே முக்கிய கவனம் செலுத்தி வருகின்றனர். ஆனல் கிரைமியாவிலுள்ள ஸெபஸ்டபோல் முனையில் மட்டும் எதிரிப்படை வரிசையை ரஷ்யத்துருப்புகள் தகர்த்து அத்தளத்தைக் கைப்பற்றி விட்டன.

* * * *

## நேசப் படையெடுப்பு பற்றி கொப்பல்ஸ்

ஐரோப்பா மீது நேசப் படையெடுப்பு ஆரம்பிக்கப் போவது பற்றி டாக்டர் கொப்பல்ஸ் தனது வாரப் பத்திரிகையான "டாஸ் ரீச்சில்" ஒரு கட்டுரை எழுதி யிருக்கிருர். அதன் சாரம்:—படை யெடுப்புக்காக எதிரிகள் செய்து வரும் ஏற்பாடுகள் மொத்தத்தில் பூர்த்தியடைந்து விட்டன என்பது எங்களுக்குத்தெரியும். ஐரோப்பியக் கரைக்கு எதிரி வருவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. எதிர்பாராத பல கஷ்டங்களை எதிரி அனுபவிக்க வேண்டியிருக்கும். இன்னமும் சிலதுருப்புச் சீட்டுகளை நாம் கையில் மறைத்து வைத்திருக்கிருேம். இரண்டு கட்சிகளின் பலத்தையும் நாம் நன்ருக ஆராய்ந்ததில், நாம் நம்பிக்கையுடனிருக்கக் காரணமிருக்கிறது என்பது தெரிய வருகிறது.

* * * *

## முஸோலினியின் குமாரர் கைது

ராணுவத்தை விட்டு ஓடிப் போக விரும்புவோருக்கு உதவி

யதாக முஸோலினி குமாரர் விட்டோரியா ரோமில் கைது செய்யப்பட்டிருப்பதாக சொல்லப்படுகிறது.

* * * *

## ஜப்பானியக் கடற்படைத் தலைவர் உயிரிழந்தார்

ஜப்பானியக் கடற்படைத் தலைவர் அட்மிரல் மினிச்சி கோக்கா போரில் கொல்லப்பட்டார் என ஜப்பானிய செய்தி ஸ்தாபனம் தெரிவிக்கிறது.

சென்ற மார்ச் மாதம் போர் முனையில் விமானத்திலிருந்து கொண்டு நடவடிக்கைகளை நேரில் கவனித்து வரும்போது அட்மிரல் கோக்கா உயிர் இழந்தாராம்.

* * * *

## சீனாவில் ஜப்பானியர் தீவிர முயற்சி

பஸிபிக் போரில் தங்களுக்கு தோல்விகள் ஏற்படலாம் என்பதை எதிர்பார்த்து ஜப்பானியர் இப்பொழுது ஹோனன் ரயில் பாதைகளைப் பிடிக்க முழு மூச்சுடன் முயற்சி செய்கின்றனர் என்று சீன ராணுவ அதிகாரி யொருவர் கூறினர், ஹோனன் ரயில் பாதைகளை வசப்படுத்திக்கொள்வதனுல் மலேயாவுக்கும் மற்றும் ஆபத்துக்குள்ளான மற்ற பிரதேசங்களுக்குமிடையே போக்குவரத்துகளை தடைபடாமல் வைத்துக்கொள்ளலாம். வடக்கு சீனுவிலிருந்து வாபஸ் பெற்ற துருப்புகளை உபயோகிக்கும் ஜப்பானியர் இப்பொழுது பீப்பிங்-ஹாங்கோ ரயில் பாதையில் 90 மைல் நீளத்தைக் கைப்பற்றி விட்டனர். இந்தப் பாதைக்கு மேற்கிலுள்ள இரண்டாவது முக்கிய ரயில்பாதையான லுங்காய் ரயில்பாதையிலும் அவர்கள் முன்னேறுகின்றனர். இந்தப் பாதையிலுள்ள முக்கியமான இடமான லோயாங்கை அவர்கள் அடைந்துவிட்டனர்.

* * * *

## ஹாலிபாக்ஸ் தீகில்

சென்ற அரை- நூற்ருண்டு காலமாக பிரிட்டிஷ் கொள்கையில் இல்லாத புதியஅம்சம் எதுவும் அட்லாண்டிக்சாஸனத்தில் இல்லை என்று பிரிட்டிஷ் ஸ்தானீகரான லார்டு ஹாலிபாக்ஸ் அமெரிக்காவில்ஒரு கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார். சாதாரண சுயநிர்ணய உரிமை பாலஸ்தீனத்திலும் இந்தியாவிலும் பொருந்தாது. அந்நாடுகளில் ஜாதி-மத வேற்றுமைகள் இருக்கின்றன என்று அவர் கூறினர்.

* * * *

## ஸர் ஸாமுவல் ஹோருக்கு இந்தியா மந்திரிப் பதவியா?

ஸ்பெயினிலிருந்து ஸர் ஸாமுவல் ஹோர் லண்டன் திரும்புவார் என்ற செய்தி பலவித ராஜீய ஹேஷ்யங்களைக்கிளப்பி விட்டிருக்கிறது. மிஸ்டர் ஏமரிக்குப் பதிலாக அவர் இந்தியா மந்திரியாக நியமிக்கப் படலாம் எனப் பிரஸ்தாபிக்கப்படுகிறது.

* * * *

## மணிக்கு இரண்டரை விமானங்கள் வீதம் உற்பத்தி

யுத்தம் ஆரம்பமானது முதல் பிரிட்டனில் ஒவ்வொரு மணிக்கும் 2½ விமானங்கள் வீதமும் 1¾ பீரங்கிகள் வீதமும் 400 பீரங்கிக் குண்டுகள் வீதமும், 1,80,000 தோட்டாக்கள் வீதமும், உற்பத்தி செய்யப்பட்டன. சென்ற வருஷத்தில்பிரிட்டனும்,யுனைடெட் ஸ்டேட்ஸும் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய நாடுகளும் ஒவ்வொரு மணியும் 14½ விமானங்களையும், 9 பீரங்கிகளையும், 106000 பீரங்கிக் குண்டுகளையும், 30 லக்ஷம் தோட்டாக்களையும் உற்பத்தி செய்து வந்தன என்று கடற்படை மந்திரி அலெக்ஸாந்தர் தெரிவித்தார்.

* * * *

## ஜெர்மனிக்கு ஸ்பெயின் உதவியா?

ஜெர்மனியருக்காக யுத்த சம்பந்தமான தொழில்களை நடத்துவதற்கு ஸ்பெயினில் ஆட்கள் அதிகம் சேகரிக்கப்படுவதாக மாட்ரிடிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது.

* * * *

## காணுமற்போன வால்ஸா மத்தாய்

நியுயார்க்கில்காணுமற்போன வால்ஸாமத்தாயின் சவம் ஏதேனும் கிடைக்கிறதா என்று ஹட்ஸன் நதி படகுதுறைகளின் கீழிருக்கும் பாதைகளைப் போலீஸார் மீண்டும் தேடிப் பார்க்கிருர்கள். வால்ஸா மத்தாய் மறைந்து 7 வாரங்களாகி விட்டன. பாறைக்கும், நதியின் தரைமட்டத்திற்குமிடையில் அகப்பட்டுக்கொண்ட சவங்கள் மிதந்து ஜல மட்டத்திற்கு வர 6 முதல் 7 வாரங்களாகுமாதலால் போலீஸார் மீண்டும் நதியில் மத்தாயின் உடல் கிடைக்குமா என்று தேடி வருகின்றனர். வால்ஸா மத்தாய் இறந்துவிட்டாள் என்று போலீஸார் நிச்சயமாக நம்பவில்லை.

* * * *

## பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டிற்கு தீர்மானம்

லண்டனில் நடக்கும் தொழிற்கட்சி மகாநாட்டில் கவனிக்கப்படும் விஷயங்களில் இந்தியாபற்றி 14 தீர்மானங்கள் இருக்கின்றன. இவற்றில் முதல் தீர்மானத்தை ரயில்வே தொழிலாளர் சங்கம் பிரேரித்திருக்கிறது. அத்தீர்மானம் பின்வருமாறு கூறுகிறது:—

'பாஸிஸத்தை எதிர்த்து போர் நடத்துவதற்கும், பாஸிஸ்ட் எதிர்ப்பு சக்திகளையெல்லாம் ஒன்றுபடுத்துவதற்கும் சுதந்திர இந்திய தேசீய சர்க்காரை ஸ்தாபித்துக்கொள்ள இந்திய மக்களுக்குச் சுதந்திரம் தருவது முக்கியமான காரியம். இந்திய மக்களின் அபிலாஷைகளையும் இந்த காரியம் பூர்த்தி செய்யும். இந்த நடவடிக்கை அட்லாண்டிக் சாஸனத்தின் விதிகளுக்கு உகந்தது தான்.'

---



# நாக கன்னிகை

சொக்கன்

## 29

## 'மணிமேகலை'

★

**வ. வேணுகோபாலன்**

காலத்தின் போக்கைத் தடை செய்ய யாரால் முடியும்? அது போகும் போக்கிலே செய்து போகும் திருவிளையாடல்களைத் தடுக்க யாருக்குதான் வன்மை உண்டு? அது போகும் போக்கிலேதான்—அதன் திருவிளையாடலிலேதான் யாவரும் ஒன்றாகக் கலந்து போக வேண்டியிருக்கிறது! மானிடர் மட்டுமல்ல, இமையா நாட்டத்துத் தேவருங்கூட காலச் சுழலிலே சுழல வேண்டியே இருக்கிறது. காலத்தின் போக்கிலே எத்தனையோ பெரிய மாறுதல்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் உண்டாகின்றன; அது போகும் போக்கிலே-அதன் செயலிலே ஒவ்வொரு ஜீவனும் ஒன்றாகிச் செயலழிந்து செல்கிறது. அது செய்யும் மாறுதல்கள், ஒரு வகையினர்க்கு-ஒரு வகையில் பெரிய பாக்கியத்தை அளிக்கின்றது. ஒரு வகையினருக்கோ, அவர்களுடைய பெரு வாழ்வினையும் சிதைத்து அதோகதிக்கு உள்ளாக்குகிறது. தேவராயினும், மானிடராயினும், தன் போக்கிலேயே இழுத்துச் செல்கிறது காலம்.

**காலப் போக்கு:**
**மன்னன் மாறுதல்**

இவ்வாறு, காலத்தின் விசித்திரப் போக்குக்கு உட்பட்ட, மன்னன் நெடுமுடிக் கிள்ளியும், பெரிய மாறுதல் அடைந்தான்: அவன் மட்டும் அன்று; அவன் நாடே முற்றும் புதுமை பெற்றது; நாடு நாடாயிற்று என்றுதான் சொல்ல வேண்டும். முன் போல் அவன் மனத்தில் கவலை என்பதே இல்லை; களிப்பு ஊறிய உள்ளம் படைத்து விளங்கினான். நாட்டில் அவனிடம் முன்பிருந்த மதிப்புக் குறைவு மாய்ந்து, மக்களின் புகழுக்கும் அன்புக்கும் நிலைக்களமாக விளங்கினான். புலவரின் புகழ்மாலைகள் அவன் பெருமையை விகசிக்கச் செய்தன. 'கவலையில்லாத வாழ்வு' என்று சொல்வார்களே, இப்போதுதான் அவ் வாழ்வு அவனுக்கு உண்டாகியிருந்தது.

நாககன்னியின் நினைவை மறந்து எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன; அவள் தொடர்பால் ஏற்பட்ட விபரீத நிகழ்ச்சிகளைக் கூட அவன் மறந்து விட்டான்; அவளை அவன் மறந்து நாட்கள் பல-மாதங்கள் பல—வருஷங்கள் சில ஆகி விட்டன. காலத்தின் போக்கிலே அவள் நினைவும் போய் விட்டது. காலம் செய்த மாறுதல் என்றுதான் சொல்ல வேண்டும். போரிலே புண்பட்ட வீரனுக்குத் தழும்பு ஏற்பட்டு, அந்தத் தழும்பே, அவன் செய்த வீரப் போரை அவன் வாழ்நாள் முழுவதும் நினைவுறுத்திக்கொண்டிருக்கும். ஆனால், காலத்தின் விசித்திரப் போக்கால், அந்தத் தழும்பு மறைந்து போய், அவன் நினைவும் அற்று விடுவதும் உண்டு. அவ்வாறே, சோழன் நெடுமுடிக் கிள்ளியும் நாககன்னியின் நினைவை மறந்து விட்டான்; காலம் மறக்கச் செய்தது. சூழ்நிலை அவளை மறக்கும்படி ஆக்கி விட்டது. காலம் என்னும் பெரு வெள்ளத்திலே வந்து தோன்றிய பூங்கொடி போன்றவள்தானே அவள்! அந்தப் பூங்கொடி, வெள்ளத்தின் அணைப்பிலே சுழன்று சிக்காமல், கரையில் மோதி எறியப்பட்டு, சூரிய வெப்பத்தால் வாடிக் கருகிப் போவதும் உண்டல்லவா? அவ்விதமேதான்!

**பெற்றோரின்**
**உவகை**

சோழன் கவலையற்றுக் களிப்புற்ற வாழ்வை அடைவதற்கு வேறு காரணமும் உண்டு. அவன் மகன் உதய குமரன் வளர்பிறை போல் வளர்ந்து வந்தான். மாவலி குலத்து மங்கை சீர்த்தி, மனம் பூரித்தாள். உதயகுமரன் என்று பெயர் பெற்று விளங்கினாலும் அவன் குமரப் பருவம் கடந்து காளைப் பருவத்தை அடைந்து விட்டான். கல்விப் பயிற்சியும் போர்ப் பயிற்சியும் நிறைவாகப் பெற்று விட்டான். அவனைக் காணுந்தோறும் உவகையால் தோள் பூரித்து மெய்மறந்திருப்பான் கிள்ளி. சீர்த்தியின் உவகைப் பெருக்குக்கு அளவு உண்டா! "சோழர்குல விளக்கு! மாவலி குலத்து மாமணி! சூரிய குலத்துச் சோதி!" என்றெல்லாம், சோழனும் சீர்த்தியும் அவனைப் பாராட்டிப் பாதுகாத்தனர்.

அழகாலும், குணத்தாலும், கல்வியாலும், ஆண்மையாலும்,

இளமையாலும் ஒப்புயர்வற்று விளங்கினான் உதயகுமரன். அரசனுக்கும் சீர்த்திக்கும், அவனிடம் எவ்வளவு அன்பும் அருளும் உண்டோ, அவ்வளவுக்கு, நகர ஜனங்களும் அவனிடம் நேயம் கொண்டிருந்தனர். அரசிளங்குமரனாகிய உதயகுமரன், சோழ நாட்டின் முடிமன்னனாக விளங்கப் போவதை எதிர்நோக்கிய ஜனங்கள், அவனிடம் அன்பும் மதிப்பும் கொண்டதில் வியப்பு என்ன? சோழர்குல மாளிகைக்குப் பெருந்தூண்போன்றவன் அல்லவா? மக்கள் அனைவர்க்கும் புறத்தே உலாவும் உயிர் போன்று உதயகுமரன் கருதப்பட்டான். நாட்டுமக்களின் உயிரே, தன் உயிராக மதித்தான் உதயகுமரன். இளமையிலேயே கற்றுத்தெளிந்த மூதறிவினனாக விளங்கினான்; அரசகாரியங்களையும், கிள்ளியின் மனப்பண்பு அறிந்து கவனிக்கத் தலைப்பட்டான்; மந்திரியர் சேனைத்தலைவர், சூழ்வினையாளர் முதலிய பலரையும் தன் வசம் ஆக்கிக்கொண்டான். அவன் மதி நலத்தைக்கண்டு அரசன் வியந்தான். 'குலவித்தை கல்லாமல் பாகம் படும்' என்பது முதுமொழி அல்லவா!

### இவன் புண்ணியத்தின் உரு!

உதய குமரனின் செவ்வியையும், அவன் மதி நலத்தையும் கண்ட மன்னவனுக்குக் கவலை ஏது? 'இவனைப் பெறுவதற்கு என்ன மாதவம் செய்தான் இவ்வரசன்! இவனைப் பெற்ற இராசமாதேவி முற்பிறவியில் பெரும் புண்ணியம் செய்திருக்கிறாள்! என்று நகரமாந்தர் வீறு பேசிக்கொண்டனர். சோழனோ, "எல்லாம், எங்கள் முன்னோர் செய்த புண்ணியம்; அந்தப் புண்ணியமே, உதயகுமரனாக வடிவெடுத்து நம் மனத்தைக் களிப்பிக்கின்றது" என்றான். "குடிமக்கள் செய்த தவப்பயனாகவே இவன் நம் குலக் கொழுந்தாகப் பிறந்திருக்கிறான்" என்று பெருமிதம் புலப்படப் பேசினாள் சீர்த்தி தேவி.

இளமைக் குது குதுப்பிலே, கவலையின்றி இறுமாந்து வாழ்ந்திருக்கும் நாளிலே, உதய குமரனின் உள்ளத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கக் கூடிய சம்பவம் நிகழ்ந்தது. அதனால் அவன் வாழ்வு எந்த நிலைக்கு உள்ளாக்கியது என்பதை எவ்வாறு முன்பே உரைக்க முடியும்? முதலில் அவன் உள்ளத்தைக் கிளர்ச்சியுறச் செய்த சம்பவத்தை அறிவோமே!...



நாடகக் கணிகையர் வீதி வழியே சென்ற உதய குமாரன் பார்வை. ஒரு மாளிகையின் மேல் உப்பரிகை இருந்த இரு காதலர்களின் மீதே சென்றது.

வருஷந்தோறும், கொண்டாடப் பெறும் 'இந்திர விழா' அவ்வருஷத்தில் கொண்டாடப்பெற்றது. சோழன்; அவ்விழாவைத் தவறாமல், வருஷந்தோறும் செய்வது போல் செய்தான். உதயகுமரனும் அவ்விழாவில் கலந்துகொண்டு, அரசன் செய்யும் காரியங்களைச் செய்து வந்தான். நகரெங்கும் விழாக் கொண்டாட்டத்தால், ஆரவாரம் மிகுந்திருந்தது. அயல் நாட்டிலிருந்து வந்த ஜனக் கூட்டத்துக்குக் கணக்கில்லை. மங்கள வாத்திய முழக்கம், ஜனங்களின் பேரிரைச்சல், கடல் முழக்கம் இவை ஒன்றனோடு ஒன்று எதிரிட்டன. அழகு செய்யாத இடம் அந்நகரில் இல்லை எங்கு பார்த்தாலும் கொடியும் பொற்பாலிகையும், பூவும், தோரணமும் தோற்றம் அளித்தன. இவ்விதமாக இந்திரவிழா இருபத்தெட்டு நாட்கள் நடந்தாகவேண்டும். நகர் செழிப்புறும் நிமித்தமாக இந்திரனுக்கு விழாக் கொண்டாடுதலை மேற்கொண்டனர். இந்திரனின் படிமத்தை (வடிவத்தை) காவிரியாற்றில் நீராட்டுவித்துக் கோயிலில் வைத்துப் பூசனை புரிந்தனர். இருபத்தெட்டு நாட்களிலே, இடையே, ஒவ்வொரு நாட்களும், அறவுரை சமயவாதம், சொற்பொழிவு, இசை, நாடகம், நாட்டியம், வாத்திய வாசிப்பு முதலியவற்றால், அவ்வவற்றில் வல்லுநர்களைக் கொண்டு ஜனங்களை மகிழ்விப்பது மரபு.

### மணிமேகலை வராததால் ஏக்கம்

அவ்வகையில் பல நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன. நாட்டியம் ஆடி வருஷந்தோறும், மக்களையும் மன்னனையும் மகிழ்விக்கும், மாதவி மகள் மணிமேகலை, வரவில்லை. அன்று நாட்டியம் ஆடுதற்கு அவள் வரவில்லை என்பதை உணர்ந்ததும் முதலில் வருந்தி ஏங்கியவன் உதயகுமரனே. அவன் மனம் கலங்கியது போல் வேறு யாரும் கலங்கவில்லை. அவள் நாட்டியம் ஆட வராதது, நகரிலேயே பெரிய பேச்சை உண்டாக்கியது. மணிமேகலையின் நாட்டியத்திலே மயங்கிக் கலங்காதவர் யார்? வருஷந்தோறும், அவள் சிறு

—25-ம் பக்கம்

# ஹிருதயப் பரீக்ஷை

★

பி. ஸ்ரீ

1

"இருப்பதா, இறப்பதா?—இதுதான் பிரச்னை" என்று ஷேக்ஸ்பியர்—நாடகம் ஒன்றிலே ஹாம்லெட் என்ற பிரசித்தி பெற்ற கதா நாயகன் தனக்குள் தானே சொல்லிக் கொள்ளுகிறான். சீதா தேவியும் அசோக வனத்திலே சிறையிருக்கும்போது, "இருந்து இருந்து இப்படி இறந்து கொண்டேயிருப்பதா? அல்லது நான் இறந்து வாழ்வதா? இந்த நிலையில் இறப்பது தானே எனக்கு வாழ்வு?" என்ற ஒரு பெரும் பிரச்னையைத் தன் ஹிருதயத்திலே எழுப்புகிறாள்; எழுப்பியவளாய்த் தற்கொலை செய்துகொள்ள யத்தனிக்கிறாள். இப்பேர்ப்பட்ட இதிகாசப் பிரசித்தியும், நாடகப் பிரசித்தியுமான ஒரு பெரிய வாழ்க்கைப் பிரச்னை ஜோஸெப் ஆசீர்வாதத்தின் அகக்கண் முன்பும் வந்து நின்றது. ஆசீர்வாதம் தற்கொலை செய்துகொள்ள யத்தனிக்கவில்லை; ஆனால் கொலையுண்டு சாகவும் தயாராகிவிட்டான்! ஏன்? அப்படி?

அவனுடைய நோய் இன்னதென்று உறவினர்களுக்கும் தெரியாது; நண்பர்களுக்கும் தெரியாது; வைத்தியர்களுக்குக் கூடத் தெரியவில்லை! ஆனால் நோயாளிக்குத் தெரிந்தது தான்; 'தன்னைப் பிடித்த நோயா, தனக்குப் பிடித்த நோயா?' என்று.

பணக்காரனல்லவா? வைத்தியர்கள் வந்து மொய்த்தார்கள். "நரம்பு சம்பந்தமான கோளாறு" என்றார் ஒரு வைத்தியர், பார்த்த பார்வையிலேயே. "மூளைக் கோளாறு" என்று கூட ஒரு வைத்தியர் துணிந்து சொன்னார், பேசிப் பார்த்துவிட்டு. நாட்டு வைத்தியரான நல்லமுத்துப் பண்டிதர்கூட மெள்ளக் கையைப் பிடித்துப் பார்த்துவிட்டு, "ஐயாவுக்குப் பித்தம் அதிகமாயிருக்கு: பித்தம் அதிகப்பட்டால் பைத்தியம் தானே?" என்று பெருமூச்சு விட்டார்.

ஒரு வைத்தியர், "ஹிருதயத்தில் ஏதோ கோளாறு" என்று கூடச் சொல்லி விட்டார். ஆனால், "அப்படியென்ன, அந்த ஹிருதயத்திலே?" என்பது தான் அந்த வைத்திய கலா வல்லபருக்கும் விளங்கவில்லை. ஹிருதயம் என்றால் இரத்தாசயம்தானே டாக்டர்களுக்கு?

2

ஜோஸெப் ஆசீர்வாதம் பாயும் படுக்கையுமானான். தன் வீட்டில் அல்ல, ரக்ஷண்யபுரத்துக் கன்னிமேரி மருத்துவ இல்லத்திலேதான். அந்த இல்லத்தின் சொந்தக்காரரான மருத்துவமணி ஆரோக்கிய சாமியார் தான், ஹிருதயக் கோளாறாக இருக்க வேணும் என்று முதல் முதல் ஊகஞ் செய்தவர். அப்படி அவர் ஊகித்ததும் ஆசீர்வாதம் புன்னகை புரிந்து, "அப்படியானால் நானே தங்கள் மருத்துவ இல்லத்திற்கு வந்து விடுகிறேன். அங்கேயே கவனித்து அந்தக் கோளாறு இன்னதென்று கண்டு பிடிக்கலாம்." இப்படிச் சாவதைக் காட்டிலும் அப்படித்தானே..." என்று கடைசி வார்த்தைகளை மெள்ள விழுங்கிவிட்டான். அந்தப் புன்னகையின் பொருளும் வார்த்தைகளின் பொருளும் மருத்துவ நிபுணருக்குப் புரியவேயில்லை.

டாக்டர் ஆரோக்கியம் பேச்சுக் கலையில் நிபுணரில்லை; ஹிருதய ரோக நிபுணர் என்றே பேர்வாங்கியிருந்தார். அவரது முதற் கவலை அந்த வியாதிக்கு என்ன பெயர் கொடுக்கலாம் என்பதுதான். மூளையைக் குழப்பிக் கொண்டார்; வைத்திய அகராதிகளைப் புரட்டிப் புரட்டிப் பார்த்த வண்ணமாயிருந்தார். அந்த அற்புதமான வியாதிக்குப் பெயரில்லாமல் போய் விடலாகாதே!—என்ற ஒரே கவலை. கடைசியாக ஒரு பயங்கரமான பெயரை லத்தீன் பாஷையிலிருந்து தேர்ந்தெடுத்தார்.

"கண்டு பிடித்தேன்; பிடித்தே விட்டேன்!" என்ற குதூகலத்துடன் அந்தப் பெயரை உச்சரிப்பதிலுள்ள சிரமத்தையும் பாராமல் அதை நோயாளி காதிலும் போட்டு வைத்தார். அதற்கு அந்த நோயாளி, "அப்படியா செய்தி? இந்த நோய் கூடச் 'சுதேசியில்லையா? எனக்குப் பிடித்த நோயும் 'பரதேசி' தானா?" என்று சிரித்தான்.

வைத்தியரோ "என்ன? சிரிக்கிறீர்களே! எந்த நிமிஷத்திலும் மரணம் சம்பவிக்கலாமே! அந்த மரணத்தையும் இந்த நோயையும் சிரித்து



"ஏன் இங்கப் புரட்டு? இப்படி வைத்திய நிபுணரையும் ஏமாற்றலாமா"? என்றாள் மேரி.

விரட்டி விட முடியுமா?'' என்று சினந்தார். எனினும் உடனே அந்தச் சினத்தைத் தணித்துக்கொண்டார்,— நோயாளி பணக்காரன் என்று ஞாபகப்படுத்திக் கொண்டு.

"முகத்தைப் பார், முகத்தை! இந்த முகத்தையும் குணத்தையும் பார்த்தாலே, இல்லாத நோய்களெல்லாம் வந்து விடுமே! பெயர் தான் ஆரோக்கிய சாமி; பொருத்தமில்லாத பெயர்!' என்று ஜோஸெப் ஆசீர்வாதம் வைத்தியரிடம் சொல்லிவிடவில்லை; தன் ஹிருதயத்தோடு தான் சொல்லிக்கொண்டான். ஆம், அந்த நோய் பிடித்த நெஞ்சோடு தான்!

அப்படி ஹிருதயத்தோடு பேசிக்கொண்டே, டாக்டரோடு ஸார்! ஆபரேஷன், கிபரேஷன் ஏதாவது உடனே செய்துவிடாதேயுங்கள். சாகிறதோ சாகிறதாச்சு: தங்கள் கத்திக்குத் தான் இரையாக வேணுமா? அப்படித்தான் சாக வேணுமென்றாலும், சில தினங்கள் வரையில் பொறுத்துச் செய்யுங்கள்!'' என்று மறுபடியும் சிரித்தான் ஆசிர்வாதம்.

## 3

வைத்தியரோ தமக்கு வந்த கடுங்கோபத்தையும் அடக்கிக் கொண்டு, அது எவ்வளவோ அபூர்வமான வியாதியென்றும், மேல் நாட்டு நிபுணர்களுக்குக்கூட இப்போது தமக்குக் கிடைத்திருக்கும் பாக்கியம் அபூர்வமாகத்தான் கிடைக்கக் கூடுமென்றும் சொன்னார். ஆபத்தைப் பாராமல் தைரியமாக ஆபரேஷன் செய்து பார்த்துவிட்டால், வைத்திய அறிவே வளர்ச்சி அடையக்கூடுமென்றும், உறுதி கூறி, அந்த நோய்க்குப் புகழ்மாலை சூட்டினார்.

இடையிடையே நீளமான வைத்திய பரிபாஷைகளையும் கலந்து, தமது நிபுணத்தன்மையை நோயாளியும் வியக்கவேணுமென்று பேசத் தொடங்கினார். தாம் எதிர் பார்த்த வியப்பாவது நம்பிக்கையாவது ஏற்படவில்லை என்று தெரிந்ததும், "அந்தக் கவலைகளெல்லாம் உங்களுக்கு எதற்காக? நீங்கள் மூளையைக் குழப்பிக் கொள்ளவேண்டாம். நான் சொன்னதைச் செய்ய வேண்டியதுதான் உம்முடைய கடமை'' என்று அதிகார தோரணையில் உத்தரவுசெய்துவிட்டுப் போய்விட்டார்.

டாக்டர் தம்மிடம் தொழில் பழகி வரும் வைத்தியர்களையும் சில சமயங்களில் அழைத்து வந்து நோயாளியைச் சுட்டிக் காட்டுவார். காட்டி அந்தப் புதுமையான நோயைக்குறித்து ஒரு புதுமையான பிரசங்கமே செய்துவிடுவார்.

## 4

அந்த இல்லத்தில் வேலை பார்த்து வந்த மருத்துவச்சிகளும் வந்து வந்து நோயாளியைப் பார்த்துப்போவார்கள்.

அவர்களில் சிலர், ஏதோ ஒரு அபூர்வமான பிராணியை மிருகக்காட்சிச் சாலைகளிலே பார்ப்பது போலப் பார்த்துப் போவார்கள். வேறு சிலர், "அந்தப் படுக்கை தான் சில தினங்களில் காலியாகிவிடுமே! ஆபரேஷன் தினத்திற்குப் பின்புதான் அந்த ஆசாமி இந்த லோக வாசியில்லையே!'' என்றெல்லாம் எண்ணுவது போலப் பார்ப்பார்கள். இன்னும் சில மருத்துவச்சிகள் பார்க்கும்போது, "கடைசி யாத்திரைக்குத் தயாராகி விடு' என்று மௌனப் பிரசங்கம் செய்வதுபோலவே இருக்கும். அந்தப்பார்வை.

## 5

அந்த மருத்துவச்சிகளில் ஒருத்தி மாத்திரம் பக்கத்திலே வந்து, தங்களுக்கு உடம்பு என்ன செய்கிறது?'' என்று சிறிது கவலையோடு கேட்டாள். அந்தக் குரலும் பார்வையுமே ஆசீர்வாதத்திற்கு ஏதோ ஒரு அபூர்வமுறையில் சிகித்ஸை செய்யத் தொடங்கிவிட்டன. இந்தச் சிகித்ஸை பெறுவதற்கு வந்தவன்தானே? இதற்காக எந்த நோயை அனுபவித்தால் தான் என்ன? "டாக்டர் ஆரோக்கிய சாமியாரின் சிகித்ஸையால் உயிர்...ஏன்? பண்டிதர் நல்ல முத்துவின் சிகித்ஸையால் கூட உயிரை...'' என்று எண்ணமிடலானான்.

தனக்கு மருந்து, கஞ்சி முதலியவை வேறு எந்த மருத்துவச்சி கொண்டுவந்தாலும் ஆசீர்வாதம் எரிந்து விழுவான். ஆனால் அந்த மிஸ் மேரி குணசாகரம் கொண்டுவந்தால் எந்தக் கசப்பான மருந்தையும் சாப்பிட்டு விடுவான். அந்தக் கசப்பே தெரிவதில்லை. சாதாரணக் கஞ்சியும் அவள் கையிலிருந்து கிடைக்கும்போது அமிர்தமாகவே தோன்றும்.

(29-ம் பக்கம்)

# வரதனின் மோசடி

★

(என். என்.)

வாழ்க்கை ஒரு பாலைவனமாகத் தோன்றியது வரதனுக்கு. தன்னைப் படைத்த கடவுளை மனமாறச் சபித்துக் கொண்டிருந்தான் அவன். சென்னைப் பட்டணத்தில் கவலையின்றித் திரிந்துகொண்டிருந்த தன்னை அந்த ஈவிரக்கமற்ற கடவுள் ஏன் இப்படித் தனியாகத் தலைமறைவாகக் காலங் கழிக்கும்படி செய்ய வேண்டும்?

விஷயம் பிரமாதமானதல்ல. வரதன், சென்னையில், மவுண்ட் ரோடில் உள்ள ஒரு கடையில் தன் கை வேலையைக் காண்பித்துவிட்டான்! அவன் தான் அந்தச் சாமானைத் திருடியவன் என்று கடை முதலாளிக்குத் தெரியவே, அவர் போலீஸுக்கு விஷயத்தைத் தெரிவித்துவிட்டார். போலீஸ்காரன் தன்னைவந்து பிடிப்பதற்குள், தான் சென்னையைவிட்டு வெளியேறுவது மிகவும் உசிதமாகவும், அத்தியாவசியமாகவும் வரதனுக்குத் தோன்றியது. ஆகவே, உடனே சென்னையிலிருந்து புறப்பட்ட ரயிலில் ஏறித் திருச்சிக்கு வந்து சேர்ந்தான். திருச்சியிலிருந்து ஒரு மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்தின் எல்லையில், ஒரு பிரம்மாண்டமான ஆலமரத்தடியில் உட்கார்ந்துகொண்டு, தன் விதியை நொந்தவாறு யோசித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவனுடைய ஆஸ்தியெல்லாம் சட்டைப் பையிலிருந்த எட்டே காலணாவும், மூன்று பீடிகளும், ஒரு தீப்பெட்டியுந்தான்!

கையிலுள்ள எட்டணாவும் செலவழிந்த பிறகு, என்ன செய்வது என்று தவித்துக் கொண்டிருக்கையில், தன் முதுகை யாரோ தடவிக் கொடுத்ததை உணர்ந்த வரதன் திடுக்கிட்டுத் திரும்பினான், யாரோ போலீஸ்காரன்தான் தன்மேல் சந்தேகப்பட்டுப் பிடிக்க வந்துவிட்டான் போலிருக்கிறது என்று எண்ணிக் கிலிபிடித்தவனாய்த் திரும்பிய வரதனுக்குத் தன்னைத் தடவிக் கொடுத்தது, ஒரு பசு தான் என்பதைக் கண்டவுடன் மனதிலிருந்த ஒரு பெரும்பாரம் நீங்கியதுபோல் தோன்றியது. எதிரில், தலையைக்குனிந்துகொண்டு நின்ற பசுவை உற்றுக் கவனித்தான். அதன் கழுத்திலிருந்த கயிறு பாதியில் அறுந்து தொங்கிக்கொண்டிருந்ததைக் கண்டவுடன் அது கயிற்றை அறுத்துக்கொண்டு ஓடிவந்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்துகொண்டான். பசு பார்ப்பதற்கு வெகு லட்சணமாகவும், கம்பீரமாகவும் இருந்தது. வரதனுடன் வெகு காலமாகப் பழகியதுபோல், அவன் காலடியில் அசையாமல் நின்றது.

பசுவைக் கண்ட வரதனுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'இந்தப் பசுவை அழைத்துக் கொண்டு, அதன் சொந்தக்காரர்யாரென்று விசாரித்து அவரிடம் கொண்டு போய்ச் சேர்த்தால், தனக்கு ஏதாவது வெகுமதி யளிப்பார். ஒருவேளைச் சாப்பாடு போட்டாலும் போடலாம்'' என்று தோன்றியது. 'இதுவும் நமது அதிர்ஷ்டந்தான்,' என்று பூரித்தவனாய்ப் பசுவை ஓட்டிக்கொண்டு, கிராமத்தை நோக்கி நடக்கலானான்.

வழியில் ஒரு வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்திருந்த ஒரு கிழவர், வரதனையும் பசுவையும் மாறிமாறிப் பார்த்தார். வரதன் அந்தக் கிழவரைப் பார்த்து, 'பெரியவரே, இந்தப் பசு யாருடையது தெரியுமா?' என்று கேட்பதற்காக வாயைத் திறக்குமுன் அந்தக் கிழவர் அவனைப் பார்த்து, ''ஏன், தம்பி, முத்து சாமிக் கோனார் வீட்டுப் பசு தானே இது?...விற்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தானே? ...ஹூம்...நீ சந்தைக்குத்தான் அழைத்துக்கொண்டு போகிறாயா? ''என்று கேட்டார்.

வரதன் ஒரு கணநேரம் யோசித்தான். அவன் மூளையில் பளிச்சென்று ஒரு எண்ணம் தோன்றியது.

''ஆம்...சந்தைக்குத் தான், விற்கப்போகிறேன்...என் மாமா அனுப்பியிருக்கிறார்'' என்றான்.

''ஓ! நீ முத்துசாமியின் மருமகனா!...சரி...என்ன விலைக்கு விற்பதாக உத்தேசம்? ''என்று கேட்டார் கிழவர்.



"அறுபது ரூபாய்க்குத் தம்பிடி கூடக் குறையக் கூடாது என்று மாமா உத்திரவிட்டிருக்கிறார்" என்றான் வரதன்.

"அறுபதா?...அடேயப்பா?.. இந்தப் பசு அரைப்படிக்கு மேல் ஒரு ஆழாக்குக் கூட கறக்காது என்று எனக்குத் தெரியுமே!...போன வாரம் கூட இதைப்பற்றி நான் முத்துசாமியிடம் பேசிக் கொண்டிருந்தேனே!.....சரி..... அதிகம் வளர்த்துவானேன்?... ஐம்பது ரூபாய் ரொக்கம் கையில் இப்பொழுதே கொடுத்து விடுகிறேன்...பசுவைக் கட்டிவிட்டுச் செல்...உனக்கும் சந்தைக்குப் போகும் சிரமம் மிச்சம்!....ஹூம்....யோசிக்காதே!...எனக்கு விற்றுவிட்டதாக நீ போய்ச் சொன்னால் முத்துசாமியும் சந்தோஷப்படுவான்...நானும் அவனும் வெகு நாளைய சிநேகிதர்கள், தம்பி! என்று கிழவர் வெகு சாதுர்யமாகப் பேசினார்.

வரதன் யோசிப்பவன்போல் சற்று நேரம் முகத்தைச் சுளித்துக்கொண்டு நின்றான். பிறகு சற்றேனும் மனமில்லாதவன் போல், "பெரியவரே! உங்களிஷ்டம்...விலையைத்தான் ரொம்பவும் குறைத்து விட்டீர்கள்!...மாமா கோபித்துக் கொள்வாரோ என்று கூடப் பயமாயிருக்கிறது! "என்று சொல்லிக்கொண்டே, பசுவை அங்கிருந்த தூணில்கட்டினான். "நீ ஒன்றுக்கும் கவலைப் படாதே!...நல்ல வேளை, ஞாபகம் வந்தது...தம்பி. நீ எனக்கு ஒரு உபகாரம் செய்வாயா?...அதனால் உன் மாமாவுக்கும் சந்தோஷம் உண்டாகும்...நான் முத்துசாமிக்கு நான்கு மூட்டை தவிடு அனுப்புவதாகச் சொல்லியிருந்தேன். நேற்று அனுப்ப முடியாமல் போய் விட்டது....நீ பணத்தை எடுத்துக்கொண்டு போகும்பொழுது, தவிட்டு மூட்டைகளையும் கொண்டு போகிறாயா? "என்று கிழவர் கேட்டார்."

"தவிடு மூட்டைகளா?... நான் என்ன கழுதையா, அவைகளைச் சுமப்பதற்கு?...என்று கேட்டான் வரதன்.

"அடேடே!...உன்னைத் தூக்கச் சொல்வேனா, தம்பி? என்னிடம் வண்டியிருக்கிறது... அதில் போட்டுக் கொண்டு போ...உனக்கு வண்டியோட்டத் தெரியுமல்லவா?...நான் சாயங்காலம் வந்து வண்டியைத் திருப்பியோட்டிக் கொண்டு வந்து விடுகிறேன் என்று முத்துசாமியிடம் தெரிவி..." என்று சொல்லிவிட்டுக் கிழவர் உள்ளே சென்று, ஐம்பது ரூபாய் நோட்டுகளைவரதனிடம் கொடுத்து விட்டு, இரண்டு அழகான காளைகளை ஒரு வண்டியில் பூட்டி தவிடு மூட்டைகளையும் அதில் ஏற்றி, வரதனிடம் "ஜாக்கிரதையாக ஓட்டிக்கொண்டு போ தம்பி! மாடுகள் புதிது, உன் மாமாவிடம் சாயங்காலம் நான் வருவதாகச் சொல்...பணம் பத்திரம்!" என்று கூறினார்.

வரதனுக்கு ஒரு சந்தேகம் தெளியவில்லை. வண்டியில் ஏறி உட்கார்ந்தவுடன்"அதெல்லாம் சரிதான் தாத்தா! தாங்கள் யார் என்று இதுவரையில் கூறவில்லையே!" என்று கேட்டான்

கிழவர் சிரித்துக் கொண்டே, "ஆமாம்...மறந்தேவிட்டேன்! ஒண்டிமுத்து பிள்ளை என்று சொல்..." என்றார்.

"ஆகட்டும்!...நான் வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, மாட்டைத் தட்டி விட்டான் வரதன். அவனுக்கு, தான் உட்கார்ந்திருப்பது கட்டை வண்டியிலா, அல்லது தேவேந்திர லோகத்திலா வென்றே புரியவில்லை! தன் சட்டைப் பையிலிருந்த ரூபாய் நோட்டுகளை நிமிஷத்திற்கொரு தடவை தொட்டுத் தடவிப் பார்த்துக் கொண்டான்! அவன் ஆயுளிலேயே இது வரையில் ஐம்பது ரூபாய்களைச் சேர்த்தாற்போல் பார்த்ததில்லை!

எதிரில் இன்னொரு குக்கிராமம் தெரிந்தது. வண்டியை ஓட்டிக் கொண்டே வரதன் பலமாக யோசனை செய்ய வாரம்பித்தான். இன்னொரு அருமையான யுக்தி அவன் மனதில் உதயமாயிற்று. அதையும் கையாண்டு விடுவதென்று தீர்மானித்தான். எதிரில் ஒரு

—23-ம் பக்கம்

பாரதி புதுவைக் காட்சி

# குவளை காட்டிய வழி

★

## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

நண்பர் குவளைக் கிருஷ்ணன் தந்தையாரின் பொறுமையைக் குலைப்பதில் நிபுணர் என்று முன்பு கூறியிருக்கிறேன். ஓர் நாள் இரவு பத்து மணியிருக்கும். நாங்கள் எல்லாரும் சாப்பிட்டு விட்டுத் தந்தையாருக்கு சாதத்தை தட்டில் பிசைந்து அவர் படுத்திருக்கும் கட்டிலின் கீழே வைத்துவிட்டுப் படுத்துத் தூங்கி விட்டோம். குவளைக் கிருஷ்ணன் வந்து பேயறைவது போல் கதவைத் தட்டினார். தாயார் 'யார் இப்படிக் கதவைத் தட்டுவது?' என்று கேட்டார்.

"நமது சிஷ்ய சிகாமணி குவளையாகத் தானிருக்கவேண்டும் கதவு தட்டும் அழகிலிருந்து அப்படித்தான் தோன்றுகிறது" என்றார் தந்தை. கதவைத் திறந்ததும் குவளை உள்ளே வந்தார். "அம்மா, பசிக்கிறது சாதம் போடுங்கள்" என்றார்.

"இதென்னடா இது? பூஜை வேளையில் கரடி! எனக்குச் சாதம் பிசைந்து வைத்துவிட்டு மீதியை வாயிலில் வந்த பிச்சைக்காரிக்குப் போட்டாயிற்று. 'அந்த தட்டில் எனக்கு ஒரே கவளம் வைத்துவிட்டு பாக்கியை நீ சாப்பிடு' என்றார் தந்தை. இப்போது குவளை சாப்பிட்டுவிட்டு திருவாய்மொழியையும் பாஞ்சாலி சபதத்தையும் உரத்த குரலில் பாட ஆரம்பித்தார்.

"கிருஷ்ணா, மெதுவாகப் பாடு; தூங்க வேண்டும்" என்று சொல்லிப் பார்த்தார். குவளையா கேட்பார்! சொல்லச் சொல்ல அதிகச் சப்தத்தில் ஆரம்பித்தார், "கிருஷ்ணா உன் கரகரத்த தொண்டையைக் கேட்க சகிக்காமல் தான் திருமாலும் அலை கடலில் போய் விழுந்தான்போலும்!" என்றார் தந்தை.

குவளை பேச ஆரம்பித்தார். அவரைப் பாட்டிலிருந்து கவனத்தை மாற்றுவதற்காகவே தந்தை இவ்விதம் கூறினார். "ஸ்வாமி! அந்த நெடிய திருமாலுங்கூட என் பாட்டைக் கண்டு பயப்படும்படி அற்புதமான சாரீரத்தை அவனே அருளியிருக்கிறானே! இது விந்தையிலும் விந்தை! அந்த நாளில் ராவணேச்வரன் சாமகானத்தினால் சிவபெருமானை மகிழ்வித்தான். நானோ நாராயணனை நாலுகாத தூரம் விரட்டியடிக்கும் சங்கீதம் பாடுகிறேன். நான் ஒசத்தியா? ராவணன் ஒசத்தியா? நீங்களே சொல்லுங்கள்! என்று ஆரம்பித்தார்.

தந்தைக்குப் பசியொரு பக்கம்; குவளையின் சுவாரஸ்யமற்ற பேச்சைக் கேட்டுக் கோபம் ஒரு பக்கம் எரிச்சல் பொங்கி எழுந்தது. அருகிலிருந்த சாமானை குவளையின் மேல் விட்டெறிந்தார். அது என்ன சாமான்? புத்தகம்தான் (தந்தையருக் கருகில் புஸ்தகங்களையும், வெற்றிலை பாக்கையும் தவிர வேறு என்ன இருக்கும்?) புஸ்தகத்திலிருந்து சில ஏடுகள் கிழிந்தன. குவளை "ஸ்வாமி என்னை மன்னிக்கணும்" என்றார். தந்தையார் உடனே சாந்தமடைந்தார். "என்ன காரியம் செய்தேன்! கோபத்தை அடக்கத் திறமில்லாதவன்! கோழை. இதற்கு, இந்தப் பாபத்திற்கு என்ன பிராயச்சித்தம் செய்வேன்? குவளையைத் திருத்தத் தலைப்பட்டு என் ஒழுக்கத்தினின்று தவறினேன். இந்தப் பாபத்திற்கு பிராயச்சித்தமாக மூன்று நாள் மௌன விரதமும் உண்ணா விரதமும் என்றார். குவளை உடனே தந்தையாரின் கால்களில் விழுந்து கெட்டியாகப் பிடித்துக்கொண்டார். தந்தை எவ்வளவோ சிரமப்பட்டும் அவரது பிடியிலிருந்து கால்களை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. உடனே "கிருஷ்ணா, எதற்காக இப்படி விடமாட்டேன் என்கிறாய்?

"ஸ்வாமி, என்னைத் தலையில் உமது திருவடிகளால் மிதிக்க வேண்டும். அப்படி செய்தால் தான் விடுவேன் என்றார் குவளை. தந்தை மிகவும் வருத்தத்தோடு "அடே, கண்ணா! என்னைச் சோதிக்காதே. காலை விடச் செய் கருணைக் கடலே" என்றார். குவளை "ஸ்வாமி தாம் கடவுளைக் கண்டவர். கடவுளை கட்டித் தழுவியவர். தமது பாதத் தாமரைகளைத் தழுவியதால் கடவுளைத் தழுவியதைப்போல என் மனம் ஆறுதலடைகிறது. தமது திருவடியினால் ஒரு உதை என் தலையில் உதைத்தால் என் அஞ்ஞானம் தீர்ந்துவிடும்" என்றார் குவளை. "குவளைக் கண்ணா! நீயே வென்றாய். உன்

—24-ம் பக்கம்





# BURN'S
# STONE WARE PIPES

# பர்ன்
# பீங்கான் குழாய்கள்

**பர்ன்** கம்பெனியாரின் பீங்கான் குழாய்கள் ஸ்டாண்டர்ட் ஸ்பெஸிபிகேஷனுக்கு சரியாக பி. எஸ். எஸ்-க்கு தயாரிக்கப்படுகின்றது. இக் குழாய்கள் பூமியிலுள்ள திராவகம் கலந்த காற்றுக்களால் தாக்கப்படாதது. அழிவற்றது.

சென்ற 80 வருஷங்களுக்கு மேலாக, இந்தியா, பர்மாவிலுள்ள முனிஸிபல் கார்ப்பொரேஷன்கள், சுகாதார இலாகாக்கள் மற்றுமுள்ள பொதுஸ்தாபனங்கள் **பர்னின்** பீங்கான் குழாய்களை உபயோகித்துத் திருப்தியடைந்துள்ளனர்.




**பர்ன் & கம்பெனி லிமிடெட்,** ஸ்தாபிதம்: **1781.**

**12,** மிஷன்ரோ, கல்கத்தா. தொழிற்சாலை:- ராணிகஞ்சு & ஜபல்பூர்.

சென்னை ராஜதானிக்கு ஏஜண்டுகள்:—பம்பாய் கம்பெனி லிமிடெட், த. பெ. நெ. **109**, மதராஸ்.

# BURN & CO., LTD.

ESTABLISHED 1781

12, MISSION ROW, CALCUTTA.

WORKS AT RANIGANJ AND JUBBULPORE

தொடர் கதை




வ.ரா.

## அத்தியாயம் 14

சூரியும் சாம்புவும் பி. ஏ. பரீட்சையில் தேறி விட்டார்கள். இவர்கள் இருவரும் முதல் வகுப்பில் தேறுவார்கள் என்று எல்லோரும் எண்ணியிருந்தார்கள். அவர்களுடைய எண்ணம் வீணாய்ப் போயிற்று. மாமா சேஷனுக்குத்தான், இது சம்பந்தமாக, ரொம்ப ஆத்திரம். 'குருவி பனங்காயைச் சுமக்க எண்ணினால் என்ன ஆகும்? தலை கழுத்துக்குள்ளே போய், நசுங்கி விடும். அது போலத்தான், சாம்புவின் நிலைமையும் ஆகிவிட்டது. இவனுக்கு எதற்காக லோகத்தைப் பற்றி கவலை? லோகத்தின் சிருஷ்டிகர்த்தா இருக்கிறபொழுது, நமக்கு லோகத்தைப் பற்றி கவலை எதற்கு? நம்ம சங்கதி உண்டு, நாம் உண்டு என்று இருந்தால்தான், நம்ம குடும்பம் முன்னுக்கு வர முடியும். லோகத்திலே கஷ்டம் நிறைந்து, தரித்திரமும் மார்ச்சரியமும் பொறாமையும் தாண்டவமாடுகின்றனவே என்று நாம் மனவேதனைப்படுவதால், என்ன லாபம்? நம்ம குடும்பம் முன்னுக்கு வர முடியாமல் கெட்டுப்போவதும் தவிர, இவங்களும் உடம்பு கெட்டுப் போய் திண்டாடி, அல்ப ஆயுசுக்கு ஆளாகணும். அத்திம்பேரின் (சாம்புவின் தகப்பனார்) நினைவு இப்பொழுது வருகிறது. மனுஷாளுடைய யோக க்ஷேமங்களை கவனிக்கிறதற்கு பகவான் இருக்கிறபொழுது, நாம்செய்யணும், நாம் செய்யணும் என்று பைத்தியம் பிடித்தது மாதிரி உளறிக்கொண்டிருந்தால், அது அகம்பாவம் என்று அவர் சொல்லுவார். அதுதான் இப்பொழுது ஞாபகத்துக்கு வருகிறது. இவ்வளவு ஒத்தாசையும் செய்த பெரிய பாதிரி என்ன நினைத்துக் கொள்ளுவார்? என்னமோ! போ. நம்ம குடும்பத்திலே எப்போதுமே, கைக்கெட்டினது வாய்க்கு எட்டுகிறதில்லை. சாம்பு ஆயிரம் ஆயிரமாக சம்பாதிப்பான் என்று நினைத்துக் கொண்டிருந்த ஆசையிலே மண் விழுந்து விட்டது' என்று மாமா சேஷன் அடங்காத வருத்தத்துடன் அக்காள் சாவித்திரி அம்மாளிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

சாவித்திரி அம்மாள் வாய் திறக்கவில்லை. ஆனால் பக்கத்தில் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்த நாகம்மாள் ஆத்திரமடைந்த பாம்பைப் போல சீறினாள். 'பணத்தாலும் நகைநட்டுகளாலும் ஆடைகளாலும் மனுஷாளுக்கு சந்தோஷம் வந்துவிடுமா? அப்படி சந்தோஷம் வருவதாயிருந்தால்,குபேரன் கடவுளைக் காட்டிலும் பெரியவனாக ஆகிவிடமாட்டானா? குபேரனுக்கல்லவா கோயில் கட்டி கும்பிட வேண்டும்? வாழ்க்கையை கன்னா பின்னா என்று வாழத் தீர்மானம் கொண்டிருப்பவர்களுக்குத்தான், பணத்தாசை பிடித்து, அவர்களை ஆட்டி வைக்கும். காட்டுக்குப்போன ஸ்ரீராமனும், சீதையும் தான் ரொம்ப பெரியவர்கள். அவர்கள் அரண்மனை, சிப்பந்தி பரிவாரங்கள், சுகபோகம், அதிகாரம், அலங்காரம் முதலிய எதையாவது லக்ஷியம் செய்தார்களா? புருஷனும் மனைவியும் காட்டிலிருந்தாலும் கந்த மூலங்களை புசித்தாலும் காதல் என்ற தெய்வீக சக்தியிலே மிதந்து, களிப்புடன் இருக்க முடியும் என்று ஸ்ரீராமனும், சீதாப்பிராட்டியும் எண்ண வில்லையா? பாவி ராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டானே! அதற்குப் பிறகு 'ஏ மானே! என் சீதையைக் கண்டயா? ஏ! குளமே! என் சீதையைக் கண்டயா' என்று ஸ்ரீராமன் புலம்பினது அசட்டுத்தனமா? ஸ்ரீராமனை எப்பொழுது மறுபடியும் காண்பேன் என்று சீதை அசோக வனத்தில் வருந்தி வாடியது அசட்டுத்தனமா? ஸ்ரீராமனும் சீதையும் பட்டாடைகளைக் களைந்து எறிந்து விட்டு, மரப் பட்டைகளை உடுத்திக் கொண்டார்களே, அதனால் அவர்கள் சந்தோஷம் இல்லாமல் தவித்தார்களா? ரிஷிகளின் யாகங்களைக் காத்து ரக்ஷிக்க வேண்டும் என்று ஸ்ரீராமன் எண்ணினது அகம்பாவமா? மாமா! நீங்கள் பணத்தை ரொம்பவும் சிலாகித்துப் பேசுவது எனக்கு பிடிக்கவே இல்லை. பணம் வேண்டியதுதான். ஆனால் அதற்கு பாத பூஜை செய்ய வேண்டும் என்று சொல்லுவது நியாயமில்லை என்று எனக்குத்தோன்றுகிறது'' என்று நாகம்மாள் ஆத்திரத்தோடு பேசினாள்.

மாமா சேஷன், இதைக்கேட்டு உள்ளம் பதறினார் 'கன்றுகூடி



........'முன் இருந்த நிலைக்கு அறிவில்லாமல் இருக்கிறோம். நாம் பி. ஏ. பாஸ் பண்ணி, என்ன புண்ணியம்? எந்த சமூக சிக்கலுக்காவது, நாம் பரிகாரமும் மாற்றும் தேடி விட்டோமா?........

களம் பறித்தால், வைக்கனுமாகாது, செத்தையும் ஆகாது என்று பெரியவர்கள் சொல்லுகிறார்களே, அது நிஜம் தான். பெரிய விஷயங்களைப்பற்றி, பெரியவர்கள் யோசிப்பதுதான் முறை. சின்னவர்கள் யோசிக்கிறது என்பது அபத்தம். அவர்களுக்கு என்ன தெரியும்? காம, குரோத, லோப, மோக, மத மாச்சரியம் இல்லாதவர்களுக்குத்தான், விஷயங்களின் உண்மை புலனாகும். கோபத்தில் மூழ்கிப் போனால், கண் பார்வையும், யோசனைத் திறமையும் மங்கிப் போகாதா?' என்று சேஷன் கேட்டார்.

'மாமா! நீங்க சொல்றது விசித்திரமாயிருக்கு. பசிக்காதவர்களுக்கு, பட்டினியைப்பற்றி என்ன கவலை? காம, குரோத, மோகம் முதலிய குணமுள்ளவர்களுக்குத்தான் தர்ம சாஸ்திரம் தேவை. சித்த புருஷர்களுக்கும் யோகிகளுக்கும், உலகத்தைத் துறந்தவர்களுக்கும் ஒரு கவலையுமில்லை. பழுத்து கிழமாய்ப் போனவர்களுக்குலகத்தைப் பற்றி நினைவு ஏது? பால்ய பருவத்தில் இருப்பவர்களுக்குத் தான் ஆசையும் பாசமும், சுகமும் துக்கமும் அவர்களாலே தான், இவைகளுக்கு ஆட்படமுடியும். பால்ய பருவத்தி லுள்ளவர்களை ஏளனமாகப் பேசுவது தகாது' என்று நாகம்மாள் சொன்னாள்.

'சரி! ரொம்ப தெரிந்தவள் மாதிரி பேசுகிறாயே? சாம்புவுக்கு, இப்ப என்ன வேலை கிடைக்கும்? மாதம் முப்பது ரூபாய் கிடைத்தால் கஷ்டம். இந்த சம்பளம் மூக்கு பொடிக்குக்கூடகாணாது. எல்லாரும் காற்று பக்ஷணம் பண்ணிக் கொண்டிருக்க முடியுமா? வயிறு நிறைய சாப்பிடுவதற்கு போதுமான பணம் வேண்டாமா? கௌரவமாக வாழ்வதற்கு வேண்டிய பணம் இருந்தால் தானே, மரியாதையோடு வாழ முடியும்? எத்தனை காலம் குச்சு வீட்டு வாழ்வைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்? வெள்ளைக்காரர்கள் அனுபவிக்கிற சுகத்தைப் பார்த்தால், பொருமையாக இருக்கிறது. அவர்கள் தங்கள் குழந்தைகளை எவ்வளவு லக்ஷணமாக வளர்க்கிறார்கள்? அவர்களுடைய வீடுகள் எவ்வளவு சுத்தமாக இருக்கின்றன? இது எப்படி சாத்தியமாகிறது? அவர்கள் நிறைய பணம் சம்பாதிக்கிறார்கள், சுகமாக வாழ்கிறார்கள். பணம் இருந்தால் தான் எல்லாம் நடக்கும். புராண இதிகாசக் கதைகளைக் கேட்டு, 'ச்சு' கொட்டிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது' என்றார் மாமா.

'மாமா! நான் வாய்விட்டுச் சொல்றேன் என்று வருத்தப்படாதேயுங்கள். வெள்ளைக்காரர்கள் பணம் ரொம்ப சம்பாதிக்கிறார்கள் என்பது வாஸ்தவம் தான். ஆனால், அவர்கள் தங்கள் பொம்மனாட்டிகளை, நம்மைப் போல நடத்துகிறார்களா? இந்த தேசத்திலே, பெண்கள், அப்படிப் பார்த்தா குற்றம்! இப்படிப் பார்த்தா குற்றம்! தலையை குனிந்தா குற்றம், நிமிர்ந்தா குற்றம். இந்த தேசத்திலே பெண்ணாய்ப்பிறக்கிறதைக் காட்டிலும் கேவலமான புழுவாகப் பிறக்கலாம். சுகத்தைப்பற்றி, மாமா, பேசுகிறீர்கள். பெண்களுக்கு இந்த தேசத்திலே, என்ன சுகம் வச்சு வாழறது? எதற்காக, ஆத்திரத்தை உண்டாக்குகிறீர்கள்?' என்றாள் நாகம்மாள்.

'ஏ நாகம்! நீ குழந்தையா என்ன? நீ இப்படி பேசறதை யாராவது கேட்டுக் கொண்டிருந்தால், என்ன எண்ணிக் கொள்ளுவா? அடக்க ஒடுக்கமா பேசப்படாதா? பொண்ணாய்ப் பிறந்தா கஷ்டம்தான். அதற்காக, ஜன்மமே வேண்டாம் என்று ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டியதுதான். சொச்ச காலத்தையும் நாம் மானமாய்த் தள்ளணும். அதுக்கு வழியைப் பாரு' என்று சாவித்திரி அம்மாள் இதோபதேசம் செய்தாள். இப்படி இருக்க;

நண்பர்கள் சூரியும் சாம்புவும் ஒரு நாள் கடற்கரைக்குப் போயிருந்த சமயத்தில், அவர்களுக்குள் கடுமையான விவாதம் ஏற்பட்டது. தாங்கள் முதல் வகுப்பில் தேறவில்லை என்று அவர்களுக்கு வருத்தம். அந்த வருத்தத்தில் அவர்கள் இருவரும் ஆழ்ந்து கிடந்தமையால் அவர்களிடம் மனக்கசப்பு ஏராளமாகக் குடி கொண்டிருந்தது. ஆகவே, எதைப் பார்த்தாலும், எதைக் கேட்டாலும் அவர்களுக்கு கோபம், கங்கு கரையின்றி எழுந்தது. நிதானத்தை அடியோடு இழந்து விட்டார்கள். மனச்சலிப்போடு, அவர்கள் பேசியதால், சப்தம் அதிகமாயிருந்தது. சரியான முடிவுக்கு வரக்கூடிய மனோ நிலைமை அவர்களிடம் அறவே இல்லை. எதை

—17-ம் பக்கம்

# ஸ்ரீ அருணாசலக் கவியின் பாட்டுக்கள்

ஸங்கீத ரத்னாகர அரியக்குடி ஸ்ரீ ராமானுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது

பல்லவி

வாவா அனுமானே-என்னுடன் உண்ண-வாவா சீமானே

அநுபல்லவி

ஜீவ பயம் இல்லாமல் பரதனையும் தேற
தேற்றி எனக்கு வந்து சொன்ன உன் இளைப்பாற (வா வா)

சரணங்கள்

1. அங்கே பிரம்மாஸ்திரத்தால் விழுந்த தம்பி பிழைக்க
அமிர்த மருந்து தேடிக் கொடுத்தாயே
இங்கே அக்கினியில் வீழ்ந்த தம்பி பிழைக்க
என் வரவைச் சொல்லித்தூக்கி எடுத்தாயே (வா வா)

2. சங்கடவேதனைகள் ஏதேது வந்தாலும்
தலையிட்டுக்கொண்டு தீர்க்கத் தொடுத்தாயே
பொங்கும் இரும்புக்கோட்டையும் கற்கதவுமே
போல எங்களைக்காக்க வாலாயம் அடுத்தாயே (வா வா)

3. பூட்டிய தூது நீ போய் அரக்கரைக் கொன்ற ரத்தம்
போச்சிலையே இன்னம் லங்கையில் ஈரம்
வாட்டம் இல்லாமற் சீதை தனையும் தந்தாய் நல்ல
வாழ்வும் தந்தாய் எனக் குபகாரம் (வா வா)

4. கூட்டத்திலே என்ன படையிலும் ஒருத்தன்
கொடையிலும் ஒருத்தன் உன்னதே வீரம்
தாஷ்டிகத்தம்பிமார்க்கும் தாய்மார்க்கும் ஏன்பெற்றேன்
தனக்கும் உனக்கும் நான் சொல்வதேன் உபசாரம் (வா வா)

5. சுக்ரீவனுக்கும் விபீஷணனுக்கும் தங்கள்
துரைத்தனமேல் ஆசை ஈந்தாயே
எக்காலமும் உன்தன் ஆசை என் காரியத்தில்
எங்கெங்கும் போய்ச்சுற்றி நொந்தாயே (வா வா)

6. விக்கிரமம் நீ செய்து வந்ததையாலே நாங்கள்
விருந்தமுதிருந்துண்ணத் தந்தாயே
சர்க்கரைப் பந்தலிலே தேன்மாரிப் பொழிந்தாற்போல்
சந்தோஷ வார்த்தை கொண்டு சமயத்தில் வந்தாயே (வா வா)

"பரதனைக்கண்டேன். தகவலைச் சொல்லிவிட்டு இதோ வந்துவிட்டேன் ஸ்வாமி!" என்று அனுமான் ராமனின் பாதமலர் வணங்கியபோது ஸ்ரீ ராமன் "அன்பா! நீ என்னுடைய கண்களுக்கு ஒப்பானவன். நீ செய்திருக்கும் வீரச்செயல்கள் சொல்லி முடியுமா? வா. என்னோடு விருந்து சாப்பிடு" என்று அழைக்கிறான்,

ராகம்: கமாஸ் தாளம்: ஆதி

பல்லவி

ஸ்ா ; ; ஸ்த நீ ; தப நித | பம மா கா மா, கம | பா தநி பதா நி ||
வா . . . . வா அ . னு . | மா . . . னே என் . | னுடன் . . உண்ண ||

2. ஸ்ா ; ஸ்த தநி ஸ்ா ர்ிஸ் நீ தப நித | மானே என் | னுடன் உண்ண ||
வா . . . வா . . . . . அ . னு . ||

ஸ்ா ; ஸ்த நித நீ ர்ிஸ் நீ தம பத நித. | பம மகா, ; , மா தப | மா பா ; ; ||
வா . . . வா . . . . அ . னு . . . | மா . . . . . னே . . | . . ||

அநுபல்லவி

; , — ப நித தநி ஸ்ா ஸ்ா ஸ்நி* ர்ிஸ் ஸ்ா | ; ஸ்நி நித நீ ர்ிஸ் | ஸ்ஸ் நித பா பா பா தநி ||
ஜீ . வ ப . ய மில் லா . மல் . . | ப . ர . த . . | ஊ . யும் . . தே ற . . ||

த மா — தப மக கம பா பதப தநிஸ் | ர்ி ; ; க் ஸ்ா, ஸ்நி | ர்ிஸ் நிதநி பதநி ||
. . — தே . ற் றி . . எனக்கு . . வந்து . | சொன் . ன உன் | இ . ஊ . ப் பா . ற. ||
(வா வா)

சரணம்

; , — ஸ் ஸ் நிதா தா, நிதா நித | நிபா பதநி ர்ிஸ் | ஸ் ஸ் நித பா பா பா ||
அன் . று பிரும்மா ஸ்திரத்தால். | . . விழுந்ததம் . | பி . பி . . ழைக்க ||
; , — கமப பா பத பதநீ நிதாப பா நித | பம மா ; கமா பா | ; தநி ஸ்நி தா ||
அமிர்த ம ருந் . து . . . . . தே . . | டிக் . . கொடுத்தா | யே . . . . ||

நி பா — நித பம கா ம பா பத தா ஸ்நி நீ | பா, தநிஸ் ஸ்நி* | ர்ிஸ் ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ||
. . — இன் . று . . அக்கி னி . யில் . . . | . வி . ழ்ந்த தம் | பி . . பி ழை க் க ||

; , — ஸ்ம்க்கா ம்க் ர்ிக் ம்க்ரீ ஸ்நி* ர்ிஸ் ஸ்ா | ; ப பதநி ர்ிஸ் | ஸ்ஸ் நித நிப தநி ||
. . — என் . வர வை . . . . . . ச் சொல் . லித் . . | . , தூ . க்கி ள . | டுத் . . . தா . யே . ||
(வா வா)

(மற்ற சரணங்களும் இது போலவே.)

* இந்த அடையாளம் காகலி நிஷாதம்.

# சின்னச் சாம்பு

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

யும் அர்த்தமில்லாமல், கொட்டிக் கொட்டி அளந்துகொண்டே இருந்தார்கள்.

'நம்முடைய பேச்சு சுவாரஸ்யமில்லாத பேச்சு! அதை நிறுத்திக் கொள்ளுவதுதான் உசிதம்' என்றான் சாம்பு.

'எப்படி சுவாரஸ்யமில்லாமல் போகும்' என்று வம்புக்கு இழுப்பதைப்போல, சூரி சாம்புவைக் கேட்டான்.

'காரணம் கேட்காதே! நான் வாத்தியாராக போகப்போகிறேன். இந்தத் தலைமுறையில், இளம் பிள்ளைகளை நம்ம வழிக்கு திருப்பினால்தான், அடுத்த தலைமுறையிலாவது, ஏதாவது சீர்திருத்தத்தை உருப்படியாகப் பார்க்கலாம். நாம் கொண்டிருக்கும் லக்ஷியத்திலே, அவர்களை, ஊறிப்போகும்படியாகச் செய்ய வேண்டும். தேசபக்தியின் மூலமாகத்தான், நமது நாட்டை நல்வழிப்படுத்தமுடியும். நம்ப ஜனங்களை பார்த்தால் பரிதாபமாயிருக்கிறது. வாழ்க்கையிலே அவர்களுக்கு பிடித்தமே இல்லை போல அவர்கள் வாழ்வதைப் பார்த்தால், மனதுக்கு ரொம்பவும் சங்கடமாக இருக்கிறது. எதையும் தலை குனிந்துகொண்டு சகித்துக் கொண்டிருக்கிறார்களே' என்றான் சாம்பு.

'நான் வக்கீலுக்கு படிக்கப் போகிறேன். வாத்தியாரைக் காட்டிலும் வக்கீல் தான் அதிக சுதந்திரத்தோடு இருக்க முடியும். யாருக்கும் கட்டுப்படாமல் இருந்தால்தான், நமது லக்ஷியம் கைகூடும்படியாக பிரசாரம் செய்யலாம். அதிருக்கட்டும். நாம் சிறு கணக்கு ஒன்று எடுத்துப்பார்ப்போமா?' என்று சூரி கேட்டான். 'என்ன கணக்கு?' என்றான் சாம்பு.

...'முன் இருந்த நிலைக்கு அழிவில்லாமல் இருக்கிறோம். நாம் பீ. ஏ. பாஸ் பண்ணி, என்ன புண்ணியம்? எந்த சமூக சிக்கலுக்காவது, நாம் பரிகாரமும் மாற்றும் தேடிவிட்டோமா? நாகம்மாளின் வாழ்க்கை எப்படிப் போகிறது? துபாஷ் முதலியாரின் வீட்டில் சாப்பிடலாமா, கூடாதா என்ற பிரச்னைக்கு முடிவு என்ன? நாம் தமிழ் பேசுகிறதா, இங்கிலீஷ் பேசுகிறதா? இதைப்பற்றி ஒன்றுமே தெளிவாகத்தெரியவில்லை. நமது வாழ்க்கையை எப்படி நடத்த வேண்டும் என்பதைப்பற்றியும் எதுவும் திட்டமாகப்புலப்படவில்லை. நாம் எதைப் பிரசாரம் செய்வது? குருடன் இன்னொரு குருடனுக்கு வழி காண்பிக்கிறதைப்போல இருக்கிறது நமது ஆசை. நீ என்ன நினைக்கிறாய்' என்றான் சூரி.

'சூரி! நீ சொல்லுவதெல்லாம் உண்மை. ஆனால், என் மனதிலே பட்டதைச் சொல்லுகிறேன். நாகம்மாளுக்கு இஷ்டமிருந்து, சரியான பேர்வழியாக கிடைத்தால், அவளுக்கு கலியாணம் செய்துவிடுவதாகத் தீர்மானித்துவிட்டேன். முதலியார் வீட்டில் கட்டாயம் சாப்பிட வேண்டும். சாஸ்திரமும் சம்பிரதாயமும் எப்படியிருந்தாலும் அதைப்பற்றி கவலை இல்லை. பெண்கள், ஆண்களோடு சரி சமானமாக வாழ்வதற்கான முயற்சிகளில் ஈடுபடவேண்டுமென்பது எனது சங்கற்பம். ஜாதிக்கொடுமையால்,நமது நாடு சீர் குலைந்து சின்னபின்னப்பட்டுப்போய்விட்டது. அந்தக் கொடுமை, இனியும் தலை தூக்கலாகாது. அறிவு வளர்ச்சிக்கான நூல்களை தமிழில் எழுதவேண்டும். அவசியம் ஏற்பட்டால் ஒழிய, நாம் தமிழில் தான் எப்பொழுதும் பேசவேண்டும். நம்மவர்கள் எந்தெந்தத் துறைகளில் சிறுமைப்பட்டு வாழ்கின்றார்களோ, அந்தத் துறைகளில் சிறுமையை அவ்வப்போது சந்தர்ப்பம் நேர்ந்த பொழுதெல்லாம், துடைத்துப்போக்க வேண்டும். ஜாப்தா போதுமா?' என்று சாம்பு கேட்டான்.

'ஒப்புக்கொண்டேன். வெள்ளைக்காரர்களோடு எப்படிப் பழகுவது? வெள்ளைக்காரப் பெண்ணை கலியாணம்செய்து கொள்ளலாமா?' என்று சூரி சாதுத்தனமாக வினவினான். சாம்பு சிரித்தான். 'நான் ரோஸைக் கலியாணம் செய்துகொண்டு விடுவேனோ என்ற பயத்தினால், நீ இப்படி கேள்வி கேட்கிறாப்போலிருக்கு! இதைப் பற்றி நான் யோசிக்கவே இல்லை' என்று சொல்லி, சாம்பு மறுபடியும் சிரித்தான்.

'சாம்பு! நான் ரோஸைப்பற்றி நினைக்கவே இல்லை. வீண் அவதூறு பேசாதே. பொதுவாக கேட்டேன். எனக்கு என்னமோ ஒன்று தோன்றுகிறது. இப்பொழுது உலகம் இருக்கிற நிலையில், வெள்ளையர்களுக்கும் கறுப்

பர்களுக்கும் இடையே கலியாணம் நேராமலிருப்பது தான் உத்தமம் என்று எனக்குப் படுகிறது. கலியாணம் நேர்ந்தால் குடும்பத்தில் கசப்பைத் தவிர, இன்பத்தை காண முடியாது' என்று சூரி கொஞ்சம் அழுத்தமாகவே சொன்னான்.

இருவரும் பேச்சை ஒருவாறு முடித்துக் கொண்டு, வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

மறுநாள் காலையில், சாம்புவுக்கு இரண்டு கடிதங்கள் வந்தன. ஒன்று ரோஸ் எழுதின கடிதம். அவள் இவ்வாறு எழுதியிருந்தாள்:—

"அருமை சாம்புவுக்கு! நீ பீ. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறுவாய் என்று அப்பா எதிர்பார்த்திருந்தார். அப்படி நீ தேருதது பற்றி, அவருக்கு ரொம்ப வருத்தம். என் சம்பந்தப்பட்ட வரையில், ரொம்ப சந்தோஷம்.

"பரீட்சையில் தேறுவது பிரமாதமான காரியமில்லை. 'புஸ்தகப் பூச்சி'யாரும் பரீட்சையில் தேறிவிட முடியும். வாழ்க்கை என்ற சோதனையில், வெற்றியுடன் வெளிவருவதுதான் கஷ்டம். நிமிஷந்தோறும், வாழ்க்கையில் தவறு செய்வதும் தோற்றுப்போவதும் தான் இயற்கையானதுபோலத் தோன்றுகிறது.

"எதற்காக வாழ வேண்டும் என்று கேட்டால், நூற்றுக்கு தொண்ணூற்றொன்பது பேருக்கு ஒன்றுமே தெரியாது. எப்படி வாழவேண்டும் என்று கேட்டாலும் அதே கதி தான்.

"வாழ்வு என்பதற்கு ஆதாரமாயும் தூண்டுதலாயும் இருக்கக்கூடிய உணர்ச்சிகளை, நாகரிகம் என்ற கோயிலிலே, பலி கொடுத்து வாழும் தற்போதைய உலகத்துக்கு, உய்வு இல்லை என்பது என் கருத்து. மனிதன் மனிதனை வாழ இடமே இல்லை இப்பொழுது. இந்தக் கொடுமையை மனிதர்கள் எப்படி சகித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று எனக்கு தெரியவில்லை.

"அகண்டமானது வாழ்க்கை. அதைக்கண்டு அதைரியப்படாதே. உன் அம்மா, அக்காள் எல்லோருக்கும் எனது அன்பு நிறைந்த வணக்கம்,

உன தன்புள்ள
ரோஸ்.

சாம்பு இதை உரக்கப் படிக்கவே, சூரியும் இதைக் கேட்டுக் கொண்டிருந்து, 'சபாஷ்' என்றான். 'எவ்வளவு புத்திசாலி, ரோஸ் பார்த்தாயா' என்றான் சாம்பு. மற்ற கடிதத்தை, சாம்பு பிரித்துப் பார்த்தான். ஊர், பெயர், விலாசம் ஒன்றுமில்லை. கடிதம் பின் வருமாறு:-

'தனி மனிதனைக் காட்டிலும் கூட்டம் உயர்ந்தது. கூட்டத்தைக் காட்டிலும், தேசம் உயர்ந்தது. பூமியில் பிறந்தால்தான், ஈசனைப் பார்க்க முடியும்.

'மண்ணை வெறுக்காதே. பெண்ணை வெறுத்து மனதைப் புண்ணுக்கிக் கொள்ளாதே. பொன்னை நல்வழியில் உபயோகப்படுத்து.

'எதற்கும் பயப்படாதே. யாரையும் ஏளனமாக நினைக்காதே.'

'இந்த நாட்டுக்கு எந்த வகையிலும் கௌரவத்தைத் தேடு.

'எப்பொழுதும் முன்னே சென்று கொண்டே போ. பின்னே பார்த்து சோர்வடையாதே; அல்லது அற்ப சந்தோஷப்படாதே."

'விசித்திரமான கடிதம்; ஆனல் ஒவ்வொரு வாக்கியமும் ஆணித்தரமாக இருக்கிறது' என்று நண்பர்கள் பேசிக் கொண்டார்கள்.

(தொடரும்)



மதனபள்ளி யுனைடெட் இந்தியா லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி இன்ஸ்பெக்டர் ஸ்ரீ பி. சுந்தரேசய்யர் குமாரன் சி. வெங்கடராமனுக்கும் சேலம் போஸ்டாபீஸ் அகவுண்டெண்டு ஸ்ரீ டி. கே. ஸ்ரீநிவாஸய்யர் குமாரத்தி சௌ. அலமேலுவுக்கும் சேலத்தில் சமீபத்தில் விவாகம் நடந்தது.

# ஊக்கம் என்றால் சந்தோஷம்!



உங்களுக்கு அனுபவிப்பதற்கான அளவு சக்தியிருந்தால் வாழ்க்கை ஒரு பெரிய ஆனந்தம்தான். குழந்தைகள் எல்லா விளையாட்டுகளிலும் சேரமுடியாமல் போனால் எவ்வளவு உற்சாகத்தை இழக்கிறார்கள் என்று யோசனை செய்யுங்கள். அவர்கள் சிறுவர்கள்தான். ஆகையால் அவர்களை ஊக்கத்துடனிருக்கச் செய்யுங்கள். அவர்களுக்கு அதிக நல்ல உணவு தேவை. அந்த உணவை சத்துள்ள டால்டாவினால் சமையல் செய்யவேண்டும். இந்த சுத்தமான சமையல் பதார்த்தம் இயற்கையின் அபார சக்தியைக் கொடுக்கும் உணவுப் பொருள்களைத்தருகிறது. அது உற்சாக மூட்டக்கூடிய பலத்தைக் கொடுத்து உதவி ஆரோக்கியத்தையும் பாதுகாக்கிறது.

DALDA
VANASPATI

*உங்களிடம் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட ஆகாரத்தைப்பற்றியும். 150 இந்திய உணவு தயாரிப்புகளைப்பற்றியும் விவரித்துள்ள புஸ்தகம் ஒன்று இருக்கவேண்டியது அவசியம. Dept. D82 P.O. Box No. 353, Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.*

வைட்டமின் நிறைந்த **டால்டா** *ஊக்கமளிக்கிறது.*

தாவர வஸ்துக்களால் செய்ததென்று உத்திரவாதம் பெற்றது. சீல் வைத்த டின்களிலேயே விற்கப்படுகிறது. 1, 2, 5, 10 பவுண்டு

NVM-30-193-40 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.




# தாரணவைகாசி

(விசாகம்)

புதன்:—சென்ற மாதக் கடைசியில் மேஷக் கூட்டத்தில் வக்ரத்தில் இருந்த புதன் இம்மாதம் முதல் தேதியன்று வக்ரநிவர்த்தி அடைந்து ரிஷபத்தை நோக்கி நகர ஆரம்பிக்கிறது. இம்மாதம் 20-ம் தேதியன்று (2-6-1944) புதன் ரிஷபக் கூட்டத்தை அடைகிறது. மாதக் கடைசியில் ரிஷபக் கூட்டத்திலுள்ள கிருத்திகா நக்ஷத்திரத்திற்கு 7 டிக்ரீ தெற்கே அமைந்திருக்கிறது. இம்மாதம் 16-ம் தேதியன்று (29-6-44) புதன் சூரியனிலிருந்து மேற்கே 25-டிக்ரீ தூரத்திலிருக்கிறது. அப்பொழுது இக்கிரஹத்தை விடியற்காலையில் கீழ்வானில் காணலாம். புதனிற்கருகில் சந்திரன் 7-ம் தேதியன்று (20-5-44) இருக்கும்.

சுக்கிரன்:—சென்ற சில மாதங்களாக கிழக்கே விடியற்காலையில் அழகுடன் பிரகாசித்து வந்த சுக்கிரன் இம் மாதமும் சூரியனுக்கு முன்பேயே உதயமாகி விடுகிறது. ஆனல் இது உதயமான சிறிது நேரத்திற்கெல்லாம் சூரியன் உதயமாகி விடுவதால் இதன் பூரண ஒளியையும் நாம் காண முடிவதில்லை. மாத முதலில் மேஷக் கூட்டத்தில் இருக்கும் சுக்கிரன் 11-ம் தேதியன்று ரிஷபக் கூட்டத்திற்கு மாறுகிறது. அடுத்த மாத நடுவில் சுக்கிரனும் சூரியனுடனேயே உதயமாகிறது. அதற்குப் பிறகு சுக்கிரனை மேல் வானில் காணலாம். இம் மாத நடுவில் சுக்கிரனை ஒரு 'பைனகுலர்ஸ்' வழியாகப் பார்த்தால் ஒரு அழகிய சிறிய பூர்ண சந்திரனின் தோற்றத்தைக் காட்டும்.

குஜன்:—இம்மாதம் 2-ம்தேதியன்று (15-5-44) குஜன் மிதுனக் கூட்டத்தை விட்டு கடகக் கூட்டத்திற்குச் செல்கிறது. மாத முதலில் இரவு 10-40 மணிக்கும், மாதக் கடைசியில் 9-45 மணிக்கும் அஸ்தமிப்பதால் குஜனை சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு மேற்கு வானில் பிரகாசிப்பதைக் காணலாம். இது முதல் தர ஒளி உடையது. இதற்கும் நம் பூமிக்கும் இடையேயுள்ள தூரம் அன்ருடம் அதிகரித்துக்கொண்டே வருகிறது. மாத நடுவில் குஜன் 18½ லக்ஷம் மைலுக்கு மேலுள்ளது.

குரு:—இம்மாதமெல்லாம் சிம்மத்திலேயே தங்கி வருகிறது. மாத முதலில் பிற்பகல் 6 மணிக்கு வான உச்சியை அடைவதால் குரு முன்னிரவெல்லாம் அழகாக மேல் வானில் பிரகாசிப்பதைக் காணலாம். அதன் ஒளியும் மிக அதிகம். சிம்மக் கூட்டத்தின் முக்கிய நக்ஷத்திரமான மகம் இதற்கருகேயிருக்கிறது. அது ஒரு முதல்தர நக்ஷத்திரம். அதன் ஒளியைப்போல் குருவின் ஒளி பன்மடங்கு அதிகமானது. இம்மாதம் 15-ம் தேதியன்று சந்திரன் குருவின் அருகில் அமைந்திருக்கும். அப்பொழுது குரு சந்திரனிற்கு ஒரு டிக்ரீ தூரம் தெற்கேயிருக்கும். அதாவது சந்திரனுக்கும், குருவிற்கும் இடையே இரண்டு சந்திரனை வைக்கலாம். அப்பொழுது சந்திரனின் வளர்பிறைத் தோற்றமும் அதனருகே அழகிய குருவும், மகமும் இருக்கும் காக்ஷியும் வானை அழகு படுத்துகின்றது.

சனி:—இம்மாதம் கடைசி வாரம் வரை சனி ரிஷபத்திலேயே இருந்து, பிறகு 28-ம் தேதியன்று மிதுனத்திற்கு மாறுகிறது. முக்கியமாக, இம் மாறுதலை ராசி மாறுதலாக எடுத்துக் கொள்ளக்கூடாது. ஒரு கிரஹம் ஒரு ராசியை விட்டு மறு ராசிக்கு போவதாக ஜோதிடத்தில் அனுஷ்டிக்கப்படும் தேதிகளை பஞ்சாங்கங்களில் காணலாம். ஆனல் ஒரு நக்ஷத்திரக்கூட்டத்தை விட்டு மறு நக்ஷத்திரக்கூட்டத்திற்கு மாறும் தேதியையே மேலே குறிக்கப்பட்டிருக்கிறது. முன்னிரவில் சனியை மேல் வானில் காணலாம். 11-ம் தேதியன்று மூன்றும் பிறைச் சந்திரன் சனியருகே காணப்படும்.

உரானஸும், நெப்டியூனும், முறையே ரிஷபத்திலும் கன்னியிலும் ஊர்ந்து வருகின்றன. உரானஸ் இம்மாத நடுவில் (30-5-44) சூரியனுடனேயே உதயமாகி அஸ்தமிக்கிறது.

---

## அட்டைப் படம்

''துக்கம்-சுகம்'' என்ற ஹிந்திப் படத்தில் தோன்றும் ஸித்தாரா.




★

# நகர சுகாதாரம் [காப்பிரைட்]

★

*"நோயற்ற வாழ்வு குறைவற்ற செல்வம்" என்பது முதுமொழி. இது நகரத்திலுள்ளவர்களுக்கும், கிராமத்தில் உள்ளவர்களுக்கும் பொருந்தும். நகரங்கள் கிராமங்களுக்கு உதாரணமாக விளங்கவேண்டும் என்பதை வற்புறுத்தி இக்கடிதத்தில் ஸ்ரீமான் எஸ். ஸத்தியமூர்த்தி விஷயங்கள் தெரிவித்திருக்கிறார். இது 1941-ம் வருஷம் ஜூன் மாதம் 24-ந் தேதி எழுதிய கடிதம்.*

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

கிராமப் புனருத்தாரணம் முக்கியமானது; நம் நாட்டில் பல நகரங்கள் இருக்கின்றன. அவை நம் கிராமங்களுக்கு உதாரணமாக விளங்க வேண்டும். எனவே அப்பட்டணங்களின் விஷயத்தில் சரியானவகையில் கவனம் செலுத்துவது அவசியம். நகரங்களில் கூட்டம் அதிகம்; ஆகவே சமூகத்தினர் சுத்தமாக விருக்கவேண்டியது முக்யம். தென்னிந்தியாவிலுள்ள நமது நகரங்கள் சாதாரணமாக நல்ல முறையில் அமைந்திருக்கின்றன. வட இந்தியாவிலுள்ள சில நகரங்களை நீ பார்த்திருக்கலாம். அங்கே யெல்லாம் தெருக்களெல்லாம் ரொம்பக் குறுகலாக விருக்கின்றன. வீடுகளெல்லாம் மிக்க உயரம்; சூர்ய வெளிச்சத்துக்கானவசதியில்லை. ஆதலால் அங்கு சுகாதாரப் பிரச்னை நம்முடையதைக் காட்டிலும் சிக்கலாக விருக்கிறது.

சொந்த விஷயத்திலும் சரி, உடுப்புகள் விஷயத்திலும் சரி நாம் இதர நாட்டினரைப்போல சுத்தமாகத்தான் இருக்கிறோம். நான் தென்னிந்தியாவைப்பற்றி மட்டுமேதான் சொல்லுகிறேன். நம்மவர்கள் தினசரி ஸ்னானம் செய்து, வஸ்திரங்களையும் சுத்தம் செய்கிறார்கள். இதுதான் முறை. ஆனால் தெருக்களைச் சுத்தமாக வைப்பதற்கும், அதற்கு உதவியாக விருப்பதற்கும் நாம் மற்றவர்களைப் பார்த்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

நான் இங்கு ஒரு உண்மையான விஷயத்தைச் சொல்லியே தீரவேண்டும். பொது இடங்களை அசுத்தமாக்கி, அவற்றை குப்பைக் காடாகச் செய்வதற்கு நாம் கூசுவதே இல்லை. படித்தவர்கள்கூட இந்த மாதிரி செய்கின்றனர். கூட்டம் மிகுந்த பட்டணங்களிலே நல்ல மாதிரியில், போதுமானபடி கக்கூஸ்கள் கட்டிவைக்க வேண்டும். ஆனால் அவை இருக்குமிடங்களில் கூட பக்கத்திலுள்ள இடங்களை நம்மவர்கள் அசுத்தமாக்கி விடுகின்றனர். இதுபோன்ற ஆபாஸங்களை நடக்காமல் தடுக்க நமது அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் ஜனங்கள் மனப்பூர்வமாக ஒத்துழைத்தாலன்றி எந்த நகர சபையும் நகரத்தைச் சுத்தமாக வைக்க முடியாது.

சென்ற வருஷம் நகர சுத்திகரிப்பு இயக்கம்பற்றி எனக்கு அனுபவம் ஏற்பட்டது. பிரசாரம் செய்வது நல்லதுதானென்றாலும், தண்டனை

விதிக்கப்படுமோ என்ற அச்சமும் இருப்பது அவசியமென்று அனுபவ பூர்வமாக நான் அறிந்து கொண்டேன். நமது தெருக்களை அசுத்தமாக்குவோரை ஸ்பெஷல் போலீஸாரை நியமித்து அவர்கள் மூலம் போதுமானபடி தண்டிக்கச் செய்ய வேண்டும். இம்மாதிரி அசுத்தம் செய்பவர்களை விசாரணை செய்யும் கௌரவ மாஜிஸ்திரேட்டுகளும் இன்னும் இதர மாஜிஸ்திரேட்டுகளும் அக்குற்றவாளிகள் பொதுஜன சுகாதாரத்துக்கு பெரிய அபாயத்தை உண்டாக்கக்கூடியவர்கள் என்பதை உணர வேண்டும்.

நமது நகரங்களைச் சுத்தமாக வைக்கும் விஷயத்தில் ஸ்திரீகள் வெகுவாக உதவி புரியலாம். குப்பை வண்டி போன பிறகு வீட்டிலுள்ள குப்பைகளையெல்லாம் அவர்கள் தெருவிலே கொட்டக் கூடாது. மூடிய தொட்டியொன்றில் அவற்றைப் போட்டு வைத்து முனிஸிபல் குப்பை வண்டி வந்ததும் அதில் போட வேண்டும். கொழும்பு நகரில் இது சரிவர நடக்கிறது. சென்னையிலும் ஏன் அம்மாதிரி செய்யக்கூடாது?

அடுத்தபடியாக, வீட்டுச் சமையல் பாத்திரங்களையும், மற்ற பாத்திரங்களையும் தெருவில் போட்டுக்கொண்டு கழுவக்கூடாது. சகல விதத்திலும் இது ஆபாஸமான பழக்கம். கடைசியாகக் குழந்தைகளைத் தெருவிலே அசுத்தம் செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

இதுபோன்ற விஷயங்களைப்பற்றி பள்ளிக் கூடங்களில் சிறுவர்களுக்குப் போதிக்க வேண்டும். அப்போதுதான் அவர்கள் நகரத்தில் உபயோககரமான ஸத் பிரஜைகளாகவிருக்க முடியும்.

கூட்ட மிகுந்த பட்டணங்களிலே எப்போதும் தொத்து நோய்கள் பரவக்கூடும். இரண்டாம் முறை அம்மை குத்திக்கொள்வதுபற்றி அபிப்ராயபேதமிருக்கலாம். மறு முறை அம்மை குத்திக்கொள்ளும் வழக்கம் அமுலில் உள்ள நாடுகளிலே வைசூரியே இல்லாமல் இருக்கிறது எனப் புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது. ஆகவே எல்லோரும் அம்மை குத்திக்கொள்ளும்படி செய்ய வேண்டும். அதேபோல காலரா, டைபாய்டு போன்ற நோய்களுக்கு தற்கால மருந்து பயன் தருவதாக விருக்கின்றன. ஆனால் காலா காலத்தில் நோயை அறிந்து சிகிச்சை செய்ய வேண்டும். இவ்விஷயத்திலும் பொதுமக்கள் ஒத்துழைக்க வேண்டும்.

நகரில் கால்நடைகள் இருப்பதால் பொது சுகாதாரத்துக்கு ஏற்படக்கூடிய பிரச்னை மிகவும் மகத்தானது. கறவை மாடுகள் பெருவாரியாக இருக்கின்றன. இது இப்படி இருக்கக் கூடாது. லண்டனில் 70 லட்சம் பேர் இருக்கின்றனர். இருப்பினும் லண்டன் நகரில் ஒரு மாடு கூடக்கிடையாது; பால் மட்டும் சப்ளையாகி விடுகிறது. ஆனால் அங்கேயிருப்பது போன்ற நிலைமை சென்னையில் ஏற்படுவது சாத்தியமில்லை. குடும்பங்களை உத்தேசித்து அவசியமாக இருக்க வேண்டியவை தவிர மற்ற எல்லாக் கால்நடைகளையும் நகரத்துக்கு வெளியே கொண்டுபோய் விடவேண்டும். பின்னர் கொட்டில்களில் ஈக்கள் இராது. நோய்களும் மறையும். கால் நடைகளுக்கும் மேய்வதற்கு நல்ல புல்லும், குடிக்க நல்ல ஜலமும், நல்ல காற்றும் கிடைக்கும். நமக்கும் நல்ல பால் கிடைக்கும்.

நகரில் தயாரிக்கப்படும் தின்பண்டங்களை சுகாதாரமான இடங்களில் தயாராக்கி விற்கும்படி செய்யவேண்டும். இன்று நிலைமை அப்படியில்லை. ஏழைகள் உள்ள பிரதேசங்களில் சாக்கடைகள் உள்ள பகுதிகளுக்குப் பக்கத்தில் அடுப்பை வைத்துக்கொண்டு பலகாரங்களைத் தயாரிக்கின்றனர்; ஈக்கள் மொய்க்கின்றன. ஜனங்கள் அவற்றை வாங்கித் தின்கிறார்கள். இதையெல்லாம் நாம் பார்க்கவில்லையா? இந்த நிலைமை மறையவேண்டும்.

இவைபோன்ற பிரச்னைகளையெல்லாம் தீர்க்கலாம். ஆனால் சரியான முறைப்படி நகரம் சுத்தமா யிருக்க வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். சென்னைக்குக் கூடிய விரைவில் போதிய ஜல சப்ளை வசதி கிட்டும். எங்கும் தரைக்குக் கீழேபோகும் சாக்கடைகள் ஏற்படும். மொத்தத்தில் சென்னை நன்கு அமைந்த நகரம். ஏராளமாகத் திறந்த வெளிகள் உள்ள பகுதிகள் இங்கிருக்கின்றன. மிக்க வனப்புள்ள கடற்கரை இருக்கின்றது. எனவே சென்னை அழகுள்ள நகரமாக மாற வேண்டும்.

[signature]

---

## வரதனின் மோசடி

(10-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆசாமி வந்துகொண்டிருந்ததைக் கண்ட வரதன், வண்டியை நிறுத்தினான். அவனைக் கூப்பிட்டு, "இங்கே முத்துசாமிக் கோனார் என்பவர் இருக்கிறாரா? அவர் வீடு எது?" என்று கேட்டான்.

"ஆமாம்...இருக்கிறார். அதோ, தெரிகிறதே, வாசலில் ஒரு கொட்டகை போட்ட வீடு, அதுதான்!" என்று ஒரு வீட்டைச் சுட்டிக் காண்பித்து விட்டு அவன் போய் விட்டான்.

வரதன் வண்டியை அந்த வீட்டு வாசலில் நிறுத்திவிட்டு, இறங்கி, வீட்டு வாசற்படியில் நின்று கொண்டு, "கோனார் இருக்கிறாரா?" என்று கேட்டான்.

"யாரது?" என்று கேட்டுக் கொண்டு, மீசையை முறுக்கிய வண்ணமாய் உள்ளிருந்து வெளியே வந்தார் ஒருவர்.

"நீங்கள்தானே முத்துசாமிக் கோனார்?...நான் ஒண்டிமுத்து பிள்ளையின் மருமகன்...மாமா உங்களுக்கு நான்கு மூட்டை தவிடு அனுப்பியிருக்கிறார்," என்றான் வரதன்.

"ஓ! நீ ஒண்டிமுத்துவின் மருமகனா? பலே! பேஷ்! இவ்வளவு நாளாக எந்த ஊரில் இருந்தாய், தம்பி?...எப்பொழுது வந்தாய்?...வா, உட்கார்"...என்று பிரமாதமாக உபசாரம் செய்ய ஆரம்பித்தார் முத்துசாமிக் கோனார்.

"நேற்றுத்தான் வந்தேன்... இவ்வளவு நாளாகச் சென்னையில்தான் இருந்தேன்..." என்றான் வரதன்.

"அதுதானே பார்த்தேன்!... ஆளைப் பார்த்தவுடன் முகம் சொல்கிறதல்லவா, பட்டணத்து ஆசாமி யென்று!... எல்லோரும் சௌக்கியந்தானே?... நேற்றே ஒண்டி முத்துத் தவிட்டு மூட்டைகளை அனுப்புவதாகச் சொல்லியிருந்தார்... ஹூம். நீயே வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தாயா, தம்பி! ...வண்டி காற்றாகப் பறந்திருக்குமே!...ஜோரான, மயிலைக் காளைகளல்லவா?..." என்று மாடுகளைப் பார்த்த வண்ணம் சொன்னார் முத்துசாமிக் கோனார்.

வரதன் அவர் முகத்தை ஒரு விநாடி கவனித்தான். பிறகு, சற்றுத் தாழ்ந்த குரலில், கோனாரிடம்,

"மாமா, உங்களிடம் ஒரு முக்கியமான தகவலைத் தெரிவிக்கச் சொன்னார்..." என்றான்.

"என்ன?...என்ன...? என்று ஆவலுடன் கேட்டார் கோனார்.

"மாமாவுக்குத் தற்சமயம் அவசரமாக இருநூறு ரூபாய் வேண்டியிருக்கிறதாம்...கையில் பணமில்லையாம்... அவசரத்தை உத்தேசித்து, இந்த வண்டியையும் மாடுகளையும் விற்று விடுவதாக உத்தேசித்து விட்டார்... உங்களுக்குத் தேவையாயிருந்தால், உங்களுக்கே விற்றுவிடத் தயார் என்று சொல்லச்சொன்னார்," என்றான் வரதன்.

"எனக்குத் தேவைதான்...... இரு நூறு என்கிறாயே!" ரொம்பத் தொகை என்று தோன்றுகிறது!"

"நான் என்ன செய்ய முடியும்?...அவருக்கு இரு நூறு ரூபாய் அவசியமாயிருக்கிறது. ஆகையால், அதற்குக் குறைந்து கொடுக்க மாட்டார்!"

கோனார் சற்று நேரம் யோசித்தார். அவருக்கு வெகு நாளாகவே இந்த வண்டியையும், காளைகளையும் தன்னுடையதாக்கிக் கொள்ள வேண்டும் என்று ஆசை. ஆனால் அந்த ஆசையை இது வரை வெளிக்குக் காட்டிக்கொள்ளவில்லை. வலுவில் போனால் ஒண்டி முத்து, முன்னூறு, நானூறு என்று கிராக்கி செய்து கொள்வாரென்று பயந்தே இவ்வளவு நாளாக மௌனமாக இருந்து வந்தார். இப்பொழுது தக்க சந்தர்ப்பம் வாய்த்திருக்கும்பொழுது அதை நழுவவிடுவது முட்டாள் தனம் என்று தோன்றியது.

"இருநூறு ரூபாய் அதிகம் தான்...பரவாயில்லை... என்னது சிநேகிதனுக்குத்தானே கொடுக்கிறேன்! அதனால் வருத்தமில்லை!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே சென்று, இரண்டு நூறு ரூபாய் நோட்டுகளை வரதனிடம் கொண்டு வந்து கொடுத்தார்.

தன் வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும் என்று வரதனை வற்புறுத்தினார் கோனார். ஆனால், வரதனோ பிடிவாதமாகத் தனக்கு ஏதோ ஒரு முக்கிய அலுவல் இருப்பதாகவும், சாயங்காலம் மாமாவுடன் அவசியம் வருவதாகவும் சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டான்.

அவன் கோனாரின் வீட்டைத் தாண்டியதிலிருந்து, திருச்சி ரயில்வே ஸ்டேஷனுக்கு நடந்தானா, ஓடினானாவென்று அவனுக்கே தெரியாது!

ஸ்டேஷனில் இரண்டு ரூபாய்களைக் கொடுத்து ஏதோ ஒரு டிக்கட் கேட்டான்; எந்த ஊருக்குக் கேட்டான் என்பதும் அப்பொழுது அவனுக்கு ஞாபகமில்லை!

ஆனால் வரதன் செய்த திரிசமன் இன்னும் வெளி வரவில்லை. கோனாருக்கும், ஒண்டி முத்துவுக்கும் பண விஷயத்தில் ஏமாற்றம் ஏற்பட்டதால் தகராறு அடி தடியில் முடிந்தது. பொய்த் தகவல் கொடுத்து கலாட்டா செய்ததாக இருவரும் கைதி செய்யப்பட்டனர். பழி ஓரிடமும் பண்டம் ஓரிடமுமாகப் போனதைக் கண்டு இருவரும் சிறையிலே மனம் புழுங்கினர்.

—::—

## குவளை காட்டிய வழி

(11-ம் பக்கத்தொடர்ச்சி)

மனத்தை நீ வென்றிருக்கிறுய். உனது திறமையில் கால்பாகம் கூட எனக்குக் கிடையாது. முதலை கஜேந்திரன் காலைப் பிடித்து கஜேந்திரனுக்கு 'ஆதி மூலத்தைக் காட்டியதைப் போல் எனக்கு நீயும் காலைப் பிடித்து உன் இதயத்தில் வாழும் கண்ணனைக் காட்டினுய், இனி நீ என் சிஷ்யனல்ல! என் குரு!'' என்றுர்.

குவளை:—அதெல்லாம் சரி. மிதியுங்கள்!

தந்தை:—"கடவுளே! உன்னை மிதிக்கிறேன். உன் ஆணையினுல் என்று அவர் தலையில் மிதித்தார்.

குவளை:—சுவாமி! அருள் பெற்றேன் என்று துள்ளிக் குதித்து, சுவாமி பசியுடன் தாங்கள் இருந்தபோதிலும் தங்கள் அன்னத்தை எனக்குப் பகிர்ந்துகொடுத்து அயர்ந்திருந்த தம்மைத் தொந்தரவு செய்த என்னை வெறுக்காமல் எனக்கு அருள் செய்தீர்; தாம் முன்பு கூறிய வண்ணம் பிராயச்சித்தம் தாங்கள் செய்யவேண்டாம். நான்தான் பிராயச்சித்தம்செய்வேன். அது தான் சரி என்றுர்.

தாயார்:—தயவு செய்து நான் சொல்வதை நீங்கள் இருவரும் கேட்கவேண்டும். நீங்கள் பெரிய குற்றம் ஒன்றும் செய்துவிடவில்லை. தான் செய்த பிழைக்கு மனதாரப் பச்சாத்தாப படுபவன் செய்யும் பாபங்களை கடவுள் மன்னித்து விடுவார். அதனுல் பேசாமல் தூங்கப்போங்கள்.

"வாழ்க பத்தினித் தெய்வம்" என்று கூறி தந்தையார் படுக்கைக்குச் சென்றுர். குவளையோ, முறையே திருவாய் மொழிச் சந்தை ஆரம்பித்தார்.

—::—





# நாக கன்னிகை

(6-ம் பக்க தொடர்ச்சி)

வயது தொடங்கி, யாவருடைய மனத்தையும் கொள்ளை கொண்டாள் தன் அழகாலும் நாட்டியத்தாலும். ஏன்?—அன்று ஒரு நாள்—அவள் சிறு வயதில் நாட்டியம் ஆடுகையில் உள்ளத்தைப் பறி கொடுத்தவன் உதயகுமரன்—அவனிடம் மயங்கியவள் அவள்! இந்நிலையில் அவ்விருவரும் உருவத்தால் வளர்ந்தது போலவே—உள்ளத்தில் காதலும் வளர்வுற்றது. அன்னை மாதவியின் ஆணைக்கு அடங்கி அவள், தவ ஒழுக்கத்தைப் பின்பற்ற வேண்டியிருந்தது. ஆனால், அவள் உள்ளம் உதயகுமரனை நினைப்பதும், மறப்பதுமாக இருந்தது. உதயகுமரனோ அவள் நினைவே உடையவனாய், அவளைக் காணும் சமயங்களில் உயிர்தளிக்க ஆறுதல் பெற்று வந்தான். வருஷந்தோறும், இந்திர விழாவிலே அவள் நாட்டியத் திறமையைக் கண்டு மனம் பூரிப்பான். அன்று தன் கைகளால் அவளுக்கு, விலை மதித்ததற்கரிய மணிமாலைகளைப் பரிசளிப்பான். ஆனால், இன்றோ—அவள் வரவில்லை; அவள் வராத காரணம் என்ன என்பதை அவன் ஊகித்து அறிந்து கொண்டான்.

## சமயம் வாய்க்கவில்லை

அன்று, நாட்டிய அரங்கேறி வேறு மகளிர் நாட்டியம் ஆடினர்; உதயகுமரன் மனமோ ஊசலாடியது, "சே, மணிமேகலையின் நாட்டியத்தைக் கண்ட கண்கள், இந்தப் பேய்களின் நாட்டியத்தைக் காண்பதா?—" என்று வெறுத்துப் புறப்பட்டான். அவன் நண்பர்களும், மற்றும் பலரும், மணிமேகலை வராத காரணத்தை உதய குமரனுக்குக் கூறினர்கள். காரணம் வேறு எதுவும் அன்று.

கோவலன் இறந்த பின்பு மாதவி தவ ஒழுக்கம் கொண்டாள். பௌத்த சங்கத்திலே சேர்ந்து அறவண அடிகள் என்ற முனிவர் மொழிப்படி தவம் செய்து கொண்டிருந்தாள்; தன் மகள் மணிமேகலையையும் தவ ஒழுக்கம் கொள்ளும்படி வற்புறுத்தி வந்தாள்; ஆனால் அவள் எண்ணம் முதலில் ஈடேறவில்லை. மாதவியின் தாயாகிய சித்திராபதி மணிமேகலையைக் குல ஒழுக்கப்படி நாடகக்கணிகையாக இருக்கச் செய்தாள். உதயகுமரனுக்கு மணிமேகலையிடம் காதல் உண்டு என்பதை உணர்ந்த சித்திராபதி, எவ்வாறேனும் அவளை உதயகுமரனுக்கு அடைக்கலமாக்க வேண்டுமென்று முயன்றாள் அதற்குச் சமயம் வாய்க்கவில்லை. மணிமேகலை நாட்டியம் ஆடும் முறை வரவே, அன்று, மாதவி அவளைத் தடுத்து, "இனி, உனக்கு இத்தொழில் வேண்டாம்; நீ என் வயிற்றில் பிறந்தாலும், கற்பின் செல்வியான கண்ணகியின் மகள்தான்" என்று கூறி விட்டாள். மணிமேகலையும் தாயின் சொல்லுக்கு மறுமொழி கூறாமல் தவ ஒழுக்கம் கொண்டாள். கண்ணகியின் பெருமையையும், கோவலனின் குல ஒழுக்கத்தையும் பாராட்டிக் கூறி மணிமேகலையின் மனத்தை மாற்றி விட்டாள்; மாதவி மொழிந்தவற்றைக் கேட்டு மணிமேகலை மனம் உருகினாள், 'நம் பிறப்பு இழிவுடையதாக ஆயிற்றே! பலரும் பழித்துக் கூறும்



"சுதமதி, உன்னுடன் மணிமேகலை வந்தவள் எங்கே? அவளை நான் பார்க்கக்கூடாதென்று மறைத்து விட்டாயா?"

பொது மடந்தையர் குலத்தில் ஏன் பிறந்தேன்? என் தந்தை இறந்ததைக் கேட்க, கேட்க என் மனம் புழுங்குகிறதே! கண்ணகியை என் தாய் என்று கூறும் பாக்கியம் எனக்குக் கிட்டுமா? கண்ணகியின் கற்புக்கு...' என்று மனம் வெதும்பினாள் மணிமேகலை.

**சித்திராபதி வஞ்சினம்**

மாதவி தடுத்து விட்டாலும், அவள் தாய் சித்திராபதி விடவில்லை. மணிமேகலையை அழைத்துச் சென்று அரங்கில் நாட்டியமாடச் செய்யவேண்டுமென்று முயன்றாள். மாதவி அறவே வெறுத்துவிட்டாள். மணிமேகலையும், "இனி நான் நாட்டியம் ஆட அரங்கில் ஏறேன். இது நிச்சயம்! புத்ததேவன் ஆணை!" என்று வஞ்சினம் கூறினாள். "உன்னை அரங்கில் ஏற்றி நாட்டியம் ஆடும்படி செய்கிறேன்; இது நிச்சயம்! உன்மேல் ஆணை!" என்று சித்திராபதி வஞ்சினம் கூறிக்கோபத்தோடு சென்றாள். மணிமேகலை பாட்டியின் பேச்சைக்கேட்டு மயங்கியிருந்தாள். மாதவி அவளுக்கு அறவுரை கூறி மணிமேகலையின் புத்தியைத் தெளிவுறச் செய்தாள்.

கோவலன் கொலையுண்டதையும், கண்ணகி தன் மறக்கற்பைப் புலப்படுத்தியதையும் மாதவி கூறக்கேட்ட மணிமேகலை கண்ணீர் சொரிந்து விம்மி மனம் கசிந்தாள். அதனால் அவள் தொடுத்துக்கொண்டிருந்த பூமாலை கண்ணீர்த்துளி பட்டு மாசுற்றது; தூய்மை இழந்தது. அதைக்கண்ட மாதவி மணிமேகலையைத் தேற்றினாள்.

"மணிமேகலை, வினையால் யாவும் நேர்ந்தது. ஆகவே அதற்கு வருந்தி என்ன செய்வது? நீ துற ஒழுக்கம் கொண்டால் அதுவே போதும். இதோ பார், நீ தொடுக்கும் பூமாலை தூய்மையிழந்தது. உன் கண்ணீர் சிந்தி விட்டதால் இம்மாலை இனி புத்ததேவனுக்குச் சார்த்த முடியாது. மறுபடியும் மலர் வனம் சென்று பூக்கள் பறித்துவா! சுதமதி, நீயும் உடன்போய்வா" என்று கூறினாள்.

மணிமேகலை மனம் தேறினாள். மாதவி மொழிப்படி மலர்வனம் போவதற்குப் புறப்பட்டாள். அவள் தோழி சுதமதியும் துணையாக, மணிமேகலையுடன் சென்றாள். நாடகக் கணிகையர் வீதி வழியே மணிமேகலை, சுதமதியுடன் மலர்வனம் போனாள். மணிமேகலையின் இளமையழகைக் கண்டு ஆடவரும் பெண்டிரும் பைத்தியம் கொண்டவர் போல், அவளையே நோக்கி அறிவிழந்தனர். பலர் நினைவற்று அவளைப் பின் தொடர்ந்து மீட்டும் திரும்பினர். விழித்த கண் மூடாமல் கண்களால் அவள் அழகை நுகர்ந்தனர். "இவளைத் தவவழியில் செலுத்திய மாதவி மிகவும் கொடியவள்! மலர்மேல் நடக்கும் தெய்வப்பெண்போல் போகிறாளே! இவள் அழகும் இளமையும் வீணாகும்படி செய்ய மாதவிக்கு எவ்வாறு மனம் வந்ததோ! தன் அழகைக் கண்டு தானே நாணி ஒசிந்துசெல்கிறாள்! பாவம்! ஏனோ இவளை இந்நிலைக்குத் தெய்வம் உள்ளாக்கியது! கோவலன் இருந்தால் அவன் இவளை இப்படிப் போகும்படி விடுவானா? இவளைப் பிறர் காணும்படி விடுவானா? சூரியன்

கூட இவளைப் பார்க்க முடியாத படி பாதுகாப்பானே!........" என்று பலவாருக மாந்தர் தம்மையும் மறந்து பிதற்றினர். மணிமேகலையோ, நாணத்தால் கன்னங்கள் சிவப்பூற அழகு துளும்பும் மேனியோடு நடந்து சென்ருள்.

பட்டத்து யானைக்கு மதவெறி

இந்நிலையில் அரசன் பட்டத்து யானையாகிய காலவேகம் மதவெறி கொண்டு நகரைக் கலக்கியது. மாந்தர் பயந்து அங்கும் இங்கும் ஓடி ஆரவாரம் செய்தனர். விழாவின் பொருட்டுக் கூட்டம் மிகுதியாக இருந்தமையால், யானை கட்டுக்கு அடங்காமல் பல பாகர்களையும், துகைத்து அழித்துக் கொடித் தேர் வீதியின் புறம் ஓடியது. "யானையை அடக்குவார் யாரும் இல்லையா? இந்நகரில் வீரனே இல்லையா? இந்த ஒரு யானையை அடக்கி பிடிக்க ஆண்மகன் இந்நகரில் பிறக்கவில்லையா?" என்று பலரும் கூக்குரலிட்டனர்.

சோழன் நெடுமுடிக்கிள்ளி மனம் கலங்கினுன். வீரர் பலரை அனுப்பினுன். படையுடன், சோழிக ஏனுதியும் பண்ணனும், யானையை வளைத்தனர். யானை கடுங் கோபத்துடன் பிளிறிக் கொண்டு ஓடியது. அப்போதே உதயகுமரன், ஒரு தேர் மீது ஏறி யானையைப் பின் தொடர்ந்தான். அம்பாலும் வேலாலும் அதைத் துன்புறுத்தினுன். பீடிகைத் தெருவை அணைந்ததும் யானை களைப்புற்று நின்றது; இடியொலியெனப் பிளிறியது. அணுகுவதற்கு யாவரும் அஞ்சினர். படைகளைச் சூழ நிறுத்தி விட்டு உதயகுமரன் அஞ்சா நெஞ்சத்துடன் தேரை விட்டு இறங்கினுன். கையில் வேலைத் தாங்கிக்கொண்டு யானையின் முன் பந்துபோல் தாவிக் குதித்தான். வேலைச் சுழற்றி அதன் மத்தகத்திலே செருகினுன். அடுத்த கணமே யானையின் இரு தந்தங்களையே துணையாக விரைந்து பற்றி, அதன் மீது ஏறிக்கொண்டான். யானையின் குறும்பு மிகுதியாயிற்று. வேல் கொண்டு யானையின் கவளிலே பாய்ச்சி, அதன் மதத்தை அடக்கினுன். யானை உதயகுமரனின் மனம் போல் நின்றது.

உதயகுமரன், கால வேகத்தை அடக்கிவிட்ட செய்தி யாவருக்கும் வியப்பை அளித்தது. அவன் வீரத்தைப் பாராட்டினுர்கள். கிள்ளியின் தோள்களிரண்டும், புதல்வனின் பெரு வீரத்தைக் கண்டு பூரித்தன; "மன்னவ குமரன் வாழ்க! வாழ்க!" என்று பூமாரி பொழிந்தனர் மாந்தர். யானையைச் செலுத்தி அதற்கு உரிய இடத்திலே அதைப் பிணித்து நிறுத்திவிட்டு வெற்றி நோக்கோடு உதயகுமரன் மீண்டான்.

யானையை அடக்கிய பெருமிதம் ஒருபுறமும், மணிமேகலையைப்பற்றி சிந்தனை ஒரு புறமுமாக மனம் பொருமி, தேரில் வந்துகொண்டிருந்தான் உதயகுமரன். அவன் மனம் அலையிடைப்பட்ட துரும்பென, மறுகியது. நகர ஜனங்களின் புகழ் மொழிகளையும், அன்பு கனிந்த வரவேற்பையும் அவன் மதிக்கவில்லை. அவன் நோக்கமெல்லாம் வேறு எங்கோ ஒன்றியிருந்தது.

கணிகையர் தெருவிலே தேர்

மனத்தில் மிகுந்த கவலையோடு நாடகக் கணிகையர் வீதியிலே புகுந்து தேரைச் செலுத்தினுன், மணிமேகலையைக் கருதியே அவன் அவ்வீதியில் புகுந்தான் என்பதைப் பலரும் அறிந்தனர். மன்னவ குமரன், மணிமேகலையைத் தேடிச் செல்வதை எளிதில் உணர்ந்த பலரும், "இவனுக்கு அவள் ஏற்றவள்! ஆனுல் மாதவி அவளை மாற்றிவிட்டாளே! இளந்தளிரைத் தீயில் வாட்டுகிருளே! மணிமேகலை செய்த பாக்கியமே இவன் அவளைத் தேடிச் செல்கிருன்" என்று கூறிக்கொண்டனர். நாடகக் கணிகையர் வீதி வழியே சென்ற அவன் பார்வை, ஒரு மாளிகையின் மேல் உப்பரிகை இருந்த இரு காதலர்களின் மீதே சென்றது. சட்டென்று தேரை நிறுத்தி மீட்டும் உற்று நோக்கினுன். உப்பரிகையிலே தன் காதலியோடு வீணை வாசித்துக் கொண்டு மகிழ்ந்திருந்த எட்டி குமரன் வணிக இளைஞன் உதயகுமரனைக் கண்டதும் கீழிறங்கி வந்து அளவளாவினுன்.

"உதயகுமர, இப்போதுதான் மணிமேகலை உவவனம் போகி

ருள். அவள் தோழி சுதமதி மட்டுமே உடன் போகிருள். அவளைக்கண்டவுடன் கோவலன் கொலையுண்டது நினைவுக்கு வந்தது. அதனுல் வருந்தியிருந்தேன். வீணை வாசிப்புக்கூட மாறுபட்டு விட்டது அந்த வருத்தத்தால்...... நீ இப்போதே சென்ருல் அவளைக் காணலாம்" என்று எட்டிகுமரன் சொன்னுன். ஆர்வத்தோடு நண்பன் சொன்ன மொழிகளைக் கேட்டான் உதயகுமரன். உடனே அவனிடம் விடைபெற்றுக்கொண்டு தேரை உவவனம் நோக்கி விரைந்து செலுத்தினுன்.

உவவனத்தில்
உதயகுமாரன்

தேர் கடுகிச் சென்றது. உவவனத்தை அணுகியது. அவ்வளவிலே தேரின் மணியொலியைக் கேட்ட மணிமேகலை, உதயகுமரன் வருகையை அறிந்து, மனம் கலங்கினுள். சுதமதியும் ஒன்று செய்யத் தோன்ருதவளாய் விதிப்புற்ருள்; சட்டென்று அருகில் இருந்த பளிங்கறை அவளுக்குப்புலப்பட்டது. மணிமேகலையை அழைத்துச் சென்று அவ்வறைக்குள் போகச்செய்து, வாயிலைச் சார்த்தித் தாழிட்டுவிட்டு, தனியே சுதமதி மட்டும் வெளியே நின்ருள். உதயகுமரன் தேரை நிறுத்திவிட்டுச் சோலைக்குள் புகுந்தான். மணிமேகலையைக் காண்பதற்கு அவன் மனம் ஆவலித்தது.

சோலைக்குள் புகுந்தவன், பளிக்கறையின் அருகில் சுதமதியைக் கண்டான். புன்னகையோடு சுற்றிலும் நோக்கிவிட்டு மணிமேகலையைக் காணுமல் அவளிடம் கேட்டான்.

"சுதமதி, உன்னுடன் மணிமேகலை வந்தவள் எங்கே? அவளை நான் பார்க்கக்கூடாதென்று மறைத்துவிட்டாயா?" என்று கேட்டான்.

சுதமதி அவனுக்கு மறுமொழியளித்தாள். அவன் கேட்கவில்லை. மணிமேகலையைப் பற்றிக் கேட்டவாறே அவளை அணுகினுன்.

"அரசகுமார! உமக்கு நான் கூறக்கூடிய அறிவுரை என்ன இருக்கிறது? ஏதோ சொல்கிறேன். இவ்வுடம்பு வினைப்பயனை வந்தது; வினைக்கு விளைநிலமாகவும் உள்ளது; புலால் நாற்றம் நாறுவது. ஆசை, கோபம், பொருமை, யாவுக்கும் இருப்பிடமாகவுள்ளது. இவ்வுடம்பின் நிலையாமையை நன்கு உணர்ந்த தாங்களும் பெண் ஒருத்தியை நாடி இங்கு வந்தது மிகவும் இழிவானது" என்று சுதமதி கூறிக்கொண்டிருக்கையில், பளிக்கறையினுள் இருந்த மணிமேகலையின் வடிவம் அவன் கண்களுக்குப் புலனுயிற்று.

சுதமதியின் வார்த்தைகளை மதியாதவனுய்ப் பளிக்கறைக்குள் புகுவதற்கு முயன்ருன். மண்டபத்தைச் சுற்றினுன். அதனுள்ளே புகும் வாயிற்புறம் அவனுக்குப் புலப்படவில்லை. சுதமதியிடம் மீட்டும் கேட்டான். தன் விருப்பத்தை மணிமேகலையிடம் கூறும்படிச் சொன்னுன்.

மணிமேகலை
எப்படிப்பட்டவள்?

"சுதமதி, மணிமேகலை 'எத்தன்மையள்?" என்று முறுவலித்தான்.

"குமர, அவள் காம விகாரமற்றவள்! குற்றம் செய்தவரைச் சபிக்கும் சக்தி பெற்றவள். அவளை நீ விரும்புவது தக்கதன்று" என்று சுதமதி மொழிந்தாள்.

"சுதமதி, அவளைப்பற்றி நான் அறிவேன்; என்னிடம் அவளுக்கும் காதலுண்டு. என் மனத்தைக் கட்டுக்குள்ளாக்க முடியாது. அவளை அடைந்தே திருவேன். அவள் செவ்வாய் அமுதை உண்டே திருவேன். இப்போது அவளை நான் அடைய முடியாவிட்டாலும், இன்றிரவு, அல்லது நாளைக்குள் அவளைச் சித்திராபதியின் உதவியால் அடைவேன்" என்று கூறி, மணிமேகலையின் நிறை அழகைக் கண்டு வேட்கை மிக்கவனுய்த் தேரேறிச் சென்ருன்.

மணிமேகலையின் உருவம் அவன் மனத்தில் நிலையாகப் பதிந்துவிட்டது. அவளை அன்றிரவே அடைந்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு அரண்மனை மீண்டான். அன்றிரவே மணிமேகலை, மணிபல்லவத் தீவிற்குக் கொண்டு போகப்படுவாள் என்பதை அவன் உணரவில்லை. அது தெய்வத்தின் செயல் அல்லவா?

(தொடரும்)



ஆசீர்வாதம் தலையணையைத் தூக்கிக் கொண்டு அதையே போர்க் கருவியாக உபயோகிக்க விரும்பியவனைப் போல் எழுந்து நின்றான்.

## ஹிருதயப் பரீக்ஷை

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

நாளடைவில் மேரி குண சாகரமே மருந்துகளையும் ஆகாரங்களையும் கொண்டுவரத் தொடங்கினாள். அந்த நிலையில் நோயும் சிகித்ஸையும் அப்படியே நீண்டுபோய்க் கொண்டு இருக்கவேணும்—என்று தான் பிரார்த்தனை செய்து கொண்டான் ஆசீர்வாதம்.

6

"டாக்டர் ஆரோக்கிய சாமியார் இப்போது உங்களைப் பரீக்ஷை செய்ய வருகிறார்" என்று ஒரு நாள் புன்னகையுடன் கூறினாள் மேரி குணசாகரம். "ஐயையோ!" என்று ஆசீர்வாதம் சொல்லி வாய்மூடுவதற்குள் டாக்டரே வந்துவிட்டார்.

மேரி குணசாகரத்தின் அந்தப் புன்னகையால் ஆனந்த நடனம் செய்து கொண்டிருந்த அந்த இருதயத்தை 'ஸ்டெதஸ்கோப்' மூலம் பரிட்சித்துப் பார்த்தார் டாக்டர். "தாங்கள் நீண்ட காலம் இந்த மருத்துவ இல்லத்தில் இருக்க வேண்டிவராது; இந்தப் பொல்லாத இருதய நோய்..." என்று ஏதோ சொல்லத் தொடங்கியவர் பாதி வாக்கியத்தை நோயாளியின் காதில் படாதபடி முணுமுணுத்துக் கொண்டே போய் விட்டார். போகும் போதே, மறுபடியும் நாம் அந்த இருதயத்தைத் தொடர்ந்து பரீட்சிக்கப் போவதாகவும் சொன்னார்.

டாக்டர் போனதும் சொர்க்கமே வந்து விட்டது போலத் தோன்றியது ஆசீர்வாதத்திற்கு! உயிர் துறந்து போய் அடைய வேண்டிய அந்தச்சொர்க்கம் அல்ல. எந்தப் புன்னகைக்காகவும் கடைக்கண் பார்வைக்காகவும் அந்த மகத்தான தியாகத்தை ஆசீர்வாதம் செய்திருந்தானோ, அவை கிடைத்துவிட்டன அல்லவா? அந்தப் பார்வையும் அந்தப் புன்னகையும், சவக்குழிபோலத் தோன்றிய அந்த அறையையும் சொர்க்கமாக்கிவிட்டன.

மேரி குணசாகரம்:-ஏன் இந்தப் புரட்டு? இப்படி வைத்திய நிபுணரையும் ஏமாற்றலாமா?

ஜோஸெப் ஆசீர்வாதம்:—அந்த நிபுணரை ஏமாற்ற முடியுமா? அவர் சில தினங்கள் தான் எனக்கு வாய்தா கொடுத்திருக்கிறார். அவ்வளவு பொல்லாத இருதய நோய் அல்லவா?

மேரி குணசாகரம்:—பொல்லாத நோய் என்றா சொன்னார்? பொல்லாத நோயாளி என்றல்லவா சொல்லியிருக்க வேணும்?

பிறகு அவள் மீண்டும் புன்னகை செய்து, "நான் இப்படிப் பேசிக்கொண்டேயிருந்து என் வேலையை மறந்துவிட்டால் எனக்கு வேலை போய்விடுமே!" என்று சொல்லிக்கொண்டே அறைக்கு வெளியே போய்விட்டாள்.

"இனிமேல் நான் எதற்கும் தயார்! ஆனால் ஆரோக்கிய சாமியாரின் சிகித்ஸைமட்டும்" என்று ஆசீர்வாதம் தனக்குத் தானே பேசிக்கொள்வதுபோல் அவள் காதிலும் விழும்படி சொன்னான்.

7

டாக்டர் ஆரோக்கிய சாமியார் வேறு இரண்டு நிபுணர்களோடு வந்து சேர்ந்தார். ஆசீர்வாதத்தின் ஹிருதயத்தைக் கடைசி முறையாகப் பரீட்சித்து, எப்படியாவது பைசல் செய்துவிட வேணுமென்ற மன உறுதி அந்த நிபுணர்களின் முகத்திலே பிரதிபலித்தது. அவர்களைப் பார்த்ததும், கடுமையான ஆகார நிய

# புத்தக விமர்சனம்

## ஸ்ரீ லாட் கோவிந்தாஸ்

[அட்வகேட் ஸ்ரீ ஏ. எல். பாண்டியா பிரசுரித்தது. ஸ்ரீ ஸ்ரீ. பி. வி. நன்சாரய்யா எம். ஏ., வரைந்தது.]

ஸ்ரீமான் லாட் கோவிந்தாஸைப்பற்றி தெரியாதவர்கள் சென்னையில் யாருமே இருக்க முடியாது. நல்ல தர்மிஷ்டர்; சென்னையிலே தர்மத்துக்காகப் பல காரியங்களைச் செய்தவர்; சிறந்த தேசாபிமானி; ஹிந்து தர்மத்திலிருந்து அணுவளவும் பிறழாமல் வாழ்க்கை நடத்தியவர். அவரது ஜீவிய சரிதையை விரிவுபட விளக்கும் இப்புத்தகம் தர்மசிந்தனையும், ஹிந்துமத பக்தியும் உள்ள ஒவ்வொருவருக்கும் மிக்கஉதவியாகவிருக்கும். திவான் பகதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார் இப்புத்தகத்தில் ஸ்ரீ கோவிந்த தாஸின் வாழ்க்கைச் சுருக்கத்தையும், தமது அபிப்ராயத்தையும் தெள்ளென எடுத்துக்கூறியிருக்கிறார்.

216.

## ராதையின் பிரார்த்தனை *

[ஸ்ரீ து. ராமமூர்த்தி வரைந்தது; திருவல்லிக்கேணி ஜோதிநிலையம் பிரசுரித்தது. விலை ரூ. 1-8-0; பக்கங்கள் 106.]

இந்தக்கதை ஏற்கனவே "ஆனந்த விகட"னில் தோன்றியதாகும். சிற்சில மாறுதல்களுடன் இப்போது புத்தக உருக்கொண்டு வந்திருக்கிறது அக்கதை. ஏற்கனவே வெளிவந்த கட்டுரைகளையும், கதைகளையும் ஒன்றுசேர்த்து அழகான வர்ண வேலைப்பாட்டுடன் கூடிய அட்டையையும் போட்டு வெளியே விட்டால் கதை பழையதானாலும் "இருக்கட்டும், இதையும் தான் வாங்கி வைப்போமே!" என்று பலருக்குத் தோன்றலாம் என்பதை அறிந்து நண்பர் து. ரா. வும் இப்புத்தகத்தைச் சிறிது மெருகிடச்செய்து வெளிக்கொண்டுவந்துள்ளார்.

## வரப்பெற்றோம்

இனிவரும் உலகம்:—ஸ்ரீ ஈ. வே. ராமஸ்வாமி நாயக்கர் வரைந்தது. ஈரோடு, குடி அரசுப் பதிப்பகம் வெளியிட்டது. விலை அணா 2. பக்கங்கள் 24.

நாமெல்லோரும் ஒன்று:—பொன்மலை, தென்னிந்திய ரயில்வேத்தொழிலாளர் சங்கம் வெளியிட்டது. ஸ்ரீ கே பி.பணிக்கர் சரிபார்த்து அமைத்தது. தென்னிந்திய ரயில்வே குமாஸ்தாக்கள் மகாநாட்டின் தீர்மானங்கள், நடவடிக்கை விவரங்கள் இவைகள் அடங்கிய வெளியீடு.

---

* இக்குறியுள்ள புத்தகம் 'மித்திரன்' புத்தகசாலைகளில் கிடைக்கும்.

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

மத்தால் இளைத்துக் களைத்துப் போயிருந்த ஆசீர்வாதத்திற்குக் கோபங் கோபமாய் வந்தது.

"இப்படிப்பட்ட கோபமும் அந்த இருதய நோயின் கோளாறுதான் போலிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டே ஆரோக்கிய சாமியார் தம்முடைய வைத்திய நண்பர்களை நோக்கினார். "அப்படியும் இருக்கலாம். நோய் கோபத்தை உண்டாக்குகிறது; கோபம் நோயை அதிகப்படுத்துகிறது!" என்றார் அந்த நண்பர்களில் ஒருவர். இப்போது உண்மையாகவே கோபம் அதிகரித்துவிட்டது ஆசீர்வாதத்திற்கு.

ஜோஸெப் ஆசீர்வாதம்:—என்னைப் பிணமாக்க நானே ஒரு டாக்டருக்குப் பணம் கொடுப்பது போதாதா? இன்னும் இரண்டு நிபுணர்களா? உங்களுடைய இந்தச் சேர்த்தியழகே போதும், நோயை அதிகப்படுத்தி என்னைப் பரலோகத்திற்கு அனுப்புவதற்கு! சிகித்ஸை போதும், போதும்: நான் இந்த இல்லத்தை விட்டுப் போகிறேன்."

டாக்டர் ஆரோக்கியசாமி:—அப்படிப் போனால் ஆபத்து வந்து விடும்! நான் அனுமதி கொடுக்க மாட்டேன்.

மற்ற இரண்டு நிபுணர்களும்:—(ஒரே சமயத்தில்) நாங்களும் அனுமதி கொடுக்க மாட்டோம்.

ஆசீர்வாதம் தலையணையைத் தூக்கிக் கொண்டு அதையே போர்க் கருவியாக உபயோகிக்க விரும்பியவனைப் போல் எழுந்து நின்றான். டாக்டர்கள், "ஐயோ, பைத்தியமே பிடித்து விட்டது! நோய் முற்றிப் போய் விட்டது!" என்று கூச்சலிட்டுக் கொண்டே மூலைக்கு ஒருவராய் ஓடிப் போனார்கள்.

ஜோஸெப் ஆசீர்வாதம் அறைக்கு வெளியே வந்துவிட்டான். "இனிமேல் இந்த நோயாளியின் உயிர் எங்கள் பொறுப்பில் இல்லை!" என்று வைத்தியர்கள் ஒரு முகமாய்ச் சொல்லிவிட்டார்கள். ஆசீர்வாதமோ, "இனி என்னுடைய உயிர் அந்த மருத்துவச்சியின் பொறுப்பிலேதான் இருக்கிறது!" என்று எண்ணிக்கொண்டே மருத்துவ இல்லத்திற்கு வெளியே வந்துவிட்டான்.

சிறிது தூரத்தில் மேரிகுண சாகரத்தைக் கண்டதும், "இந்தப் புரட்டெல்லாம் எதற்காக?-என்ற கதையை விவரமாகச் சொல்லட்டுமா?" என்று கேட்டான்.

# பால்கன்-ஜீ-பாரீ



அன்பார்ந்த
சகோதர சகோதரிகளே!

போன வாரம் ஒரு பழமொழி கண்டு பிடிக்கச் சொன்னேனே, அதைக்கண்டு பிடித்தீர்களா? "யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே" என்பதுவே சரியான விடை. இப்பொழுது அந்தப் படத்தைப்பாருங்கள். நான் சொல்லும் பழமொழியைக் குறிப்பிடுவது தானே அந்தப் படம்?

ஓய்வு நேரங்களில் ஸ்டாம்புகள் சேகரிப்பதைப் போல் மனதிற்கினிய உல்லாஸவேலை வேறொன்றுமில்லை. பல பல வர்ணங்களில் பலபல சித்திரங்களுடன் கூடிய பலபல மாதிரி ஸ்டாம்புகளை ஒரு புத்தகத்தில் ஒழுங்காக ஒட்டி வைத்துக் கொண்டு, அடிக்கடி அவற்றின் அழகைப் பார்ப்பதில் ஒருதனி மகிழ்ச்சி உண்டாகிறது. மனமகிழ்ச்சி மாத்திரமில்லை. நமக்கு இதர நாடுகளைப்பற்றிய அறிவும் வளருகிறது.

வருஷந்தோறும் ஒவ்வொரு நாட்டிலும் லட்சக் கணக்கான ஸ்டாம்புகள் அச்சடிக்கப்படுகின்றன. ஸ்டாம்புகளே இல்லாமற் போய் விட்டால் தபால் போக்குவரத்து மிகவும் கஷ்டமாயிருக்கும்.

இவ்வளவு உபயோகமாக இருக்கும் ஸ்டாம்புகளைக் கண்டு பிடித்தது யார் தெரியுமா? ரோலன்ட் ஹில் என்ற ஓர் ஆங்கிலேய ஆசிரியர். முதலாவது ஸ்டாம்பு 1840-ம் வருஷத்தில் வெளியாயிற்று. ஸ்டாம்புகள் பிறப்பின் வரலாறு வெகு ரஸமானது.

## தபால் காதல்!

ஆசிரியர் ரோலன்ட் ஹில் ஒரு சமயம் ஸ்காட்லண்டில் ஒரு கிராமத்துக்குப் போயிருந்தார். ஒரு நாள் தபாற்காரன் வந்ததும், எல்லோரும் அவனைச் சுற்றி கும்பல் கூடி தங்களுக்கு வந்திருக்கும் கடிதங்களை வாங்கிக்கொண்டார்கள். அக்காலத்தில் தபால் யாரிடம் போய்ச் சேருகிறதோ அவர்களிடமிருந்தே தபாற்கூலியை வசூலிப்பது வழக்கம். மேரி என்றொரு பெண்ணும் ஓடோடிப்போய் அவனுக்கு வந்திருக்கும் கடிதத்தை வாங்கிக்கொண்டாள். கொஞ்சம் நேரம் கடிதத்தின் உறையை உற்றுப் பார்த்துவிட்டு, "தபாற்கூலி செலுத்த என்னிடம் பணமில்லையே. நான் இதை எப்படி வாங்கிக்கொள்வது?" என்று சொல்லி, கடிதத்தைத் தபாற்காரனிடம் கொடுத்துவிட்டாள்.

இவ்வளவையும் அருகிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த ரோலண்டுக்கு அந்தப்பெண்ணிடம் அநுதாபம் ஏற்பட்டது. அவர் தபாற்கூலியாகிய அரைக்கிரௌனை செலுத்திவிட்டு, கடிதத்தை வாங்கிப் பெண்ணிடம் கொடுத்தார். மேரி ஒன்றும் பேசாமல் அதை வாங்கி ஜேபியில் போட்டுக் கொண்டாள்.

"ஏன் உறையைத் திறந்து பார்க்கவில்லை?" என்று ரோலன்ட் கேட்டதிற்கு மேரி இவ்வாறு பதிலளித்தாள்:

"இந்தக் கடிதம் பட்டாளத்தைச் சேர்ந்த என் காதல



"மித்திரன்" காரியாலயத்தில் 32-வருஷ காலம் சேவை செய்த பிறகு சமீபத்தில் பதவியிலிருந்து ரிடயரான ஸ்ரீ சுப்பிரமண்ய அய்யர்.

னிடமிருந்து வருகிறது. வாரந்தோறும் இப்படி ஒன்று வரும். எனக்கு ஒரு வாரத்தில் கிடைக்கும் சம்பளம் தபாற் கூலிக்கு மட்டும் தான் சரியாயிருக்கும்; அதனால் என் காதலன், அறிவிக்க விரும்பும் செய்திகளை உறையின் மேல் சின்னங்களால் குறிப்பிடுகிறார். நான் அந்தச் சின்னங்களை மாத்திரம் கவனித்துக் கொண்டு, கடிதத்தை தபாற்காரனிடமே கொடுத்து விடுவேன்."

மேரி உறையின் மேலிருந்த சின்னங்களை ரோலண்டிடம் காண்பித்தாள். பிறகு உறையைத் திறந்து உள்ளிருந்த காகிதத்தையும் காண்பித்தாள். அதில் ஒன்றுமே எழுதியிருக்கவில்லை.

அவ்விரு காதலர்களின் புத்திசாலித்தனத்தையும் ரோலண்ட் மிகவும் மெச்சினார். உடனேயே தபாற்கூலியைக் குறைக்க வழி என்னவென்று சிந்திக்கவும் தொடங்கினார். கடைசியில் ஓர் அபூர்வமான வழி அவர் மூளைக்கு எட்டியது. அது என்னவென்றால், அரசரின் உருவப்படத்தோடு கூடிய ஒரு காகிதத்துண்டை உபயோகிக்கவேண்டும் என்பது தான். கடிதம் எழுதுபவனே தபாற்கூலியைச் செலுத்தி, அதற்கு ரசீதாக ஒரு ஸ்டாம்பு வாங்கி உறையின் மேல் ஒட்டியனுப்பவேண்டும் என்பது அவர் யோசனை.

ரோலண்ட் தன் யோசனையை சர்க்காருக்கு தெரிவித்தார். ஆனால் சர்க்காருக்கு அது சரியாகப்படவில்லை. ரோலண்ட் எப்படியாவது தன் யோசனையை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று எண்ணினார். ஸ்டாம்புகளின் உபயோகத்தைப்பற்றி பல புத்தகங்கள் எழுதி வெளியிட்டு, ஜனங்களிடையே பிரசாரம் செய்ய வாரம்பித்தார். இங்கிலாந்து சர்க்கார் அந்தப் புத்தகங்களுக்கெல்லாம் தடை உத்தரவு போட்டார்கள். அவற்றை விற்றதற்காக அநேகம் மாணவர்களைக் கைது செய்தார்கள். ரோலன்ட் ஒன்றுக்கும் சளைக்காமல் சர்க்காரை வற்புறுத்திக் கொண்டும் பொது மக்களிடையே பிரசாரம் செய்து கொண்டும் இருந்தார்.

கடைசியில் அவருடைய முயற்சி வெற்றி பெற்றது. அப்பொழுது அரசுபுரிந்து வந்த விக்டோரியா மஹாராணி அவருக்கு பேட்டியளித்தார். ரோலன்டின் யோசனை அவருக்கு பிடித்ததனால் உடனேயே ஸ்டாம்புகளை அச்சிடும்படி கட்டளையிட்டார். முதல் ஸ்டாம்பு 1840-ம் வருஷத்தில் மே மாதம் 6-ம் தேதி வெளியாயிற்று. அதன் மதிப்பு ஒரு பெனியாக இருந்தது. அதை யாவரும் 'பெனி பிளாக்' (கறுப்புப் பெனி) என்று வழங்கலானார்கள்.

இந்தியாவில் ஸ்டாம்புகளை உபயோகிக்கும் வழக்கம் 1852-ல் ஏற்பட்டது. பின்னர்தான் மற்ற நாடுகளில் இவ்வழக்கம் ஏற்பட்டது.

—::—

## ஸிம்லா தென்னிந்திய சங்கம்

மேற்படி சங்கத்தின் யூனியன் தினம் சென்ற மாதம் 30-ந்தேதி இந்திய சர்க்காரின் இன்ஷூரன்ஸ் சூப்பிரன்டெண்டு ஸ்ரீ எல். எஸ். வைத்தியநாதன் அக்கிராசனத்தில் நடைபெற்றது. மாறுவேடப் போட்டி, கதம்பக் கச்சேரி முதலியவை நடைபெற்றன. இவ்வைபவத்துக்குப் பலர் விஜயம் செய்திருந்தனர்.

—::—

## மோட்டார் வண்டி

[ சகோதரன் சிதம்பரம், திருவனந்தபுரம் ]

1. மோட்டார் வண்டி ஓடுது பார்
 'பம் பம்' என்று கூவுது பார்
2. அம்பீ சீமையில் செய்த வண்டி
 அப்பா ஆபீஸ் செல்லும் வண்டி
3. அரை நொடியில் போய் விடலாம்
 'பால பிருந்தாவன்' சேர்ந்திடலாம்
4. அழகாய் அங்கே ஆடிடலாம்
 பாங்காய் பாட்டு பாடிடலாம்
5. இலகுவாய் இந்தீ கற்றிடலாம்
 இன்பமாய் யாவரும் கலந்திடலாம்
6. அங்கும் இங்கும் ஓடிடலாம்
 தொங்கும் ஊஞ்சல் ஆடிடலாம்
7. கதிரவன் மேற்திசை அடைந்தவுடன்
 காரில் காற்ருய் பறந்திடலாம்.

எல்லோருக்கும் என் அன்பு!

சகோதரன் ஹரி.

# பம்பாய் வெடி விபத்து

பம்பாய் துறைமுகத்தில் நிகழ்ந்த வெடி விபத்தால் ஏற்பட்ட உயிர், பொருள், சேதம் மகத்தானது. ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் பலவிதத்தில் உதவி செய்தனர். ஸோல்ஜர்கள், மாலுமிகள், விமானிகள் முதலிய ஒவ்வொருவரும் நூற்றுக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றினர். இந்திய என்ஜினீயரிங், ஆர்டினென்ஸ் இலாகா மிக்க அபாயகரமான நிலையில் துணிவுடன் இவ்வேலைகளில் ஈடுபட்டனர். வெடி விபத்தால் தகர்ந்து போன ஒரு பகுதியைக் காட்டும் படம்.

(வலது)



சமீபத்தில் சென்னை மவுண்ட் ரோட்டில் கோரமான மிலிட்டரி லாரி விபத்தேற்பட்டது. லாரி மோதி இறந்த சென்னை போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் கான்பகதூர் எப். ரஹ்மான்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor*: C. R. Srinivasan, B. A.